Regd. No. M. 9934
Phone No. 21841

# ஜனசக்தி

ஆசிரியர்: ப. ஜீவானந்தம்
JANASAKTHI
(காலைப் பதிப்பு)



மலர் 16 இதழ் 40] சென்னை 25-9-59 விகாரி ஹு புரட்டாசிமீ 9உ வெள்ளிக்கிழமை [4 பக்கங்கள் 7 காசுகள்

# வங்கப் போலீஸ் அட்டூழியத்திற்கு கண்டனம் முழக்குக!

## இன்றைய தலைவர்களின் மீது மக்கள் நம்பிக்கை இழந்தனர்

### வினோபா பாவே கருத்து

பதன்கோட், செப். 24—

இப்போதைய தலைவர்களின் மீது மக்கள் நம்பிக்கை இழந்து விட்டனர்; இந்த உண்மை நாட்டின் முன்னேற்றத்துக்குத் தடையாக உள்ளது என ஆச்சார்ய வினோபா பாவே கூறினார்.

நேற்று மாலை அகில இந்திய சர்வ சேவா சங்கத்தின் மூன்று நாள் மாநாட்டை இங்கு தொடங்கி வைத்துப் பேசுகையிலேயே மேற்கண்டவாறு கூறினார்.

நாட்டிலிருந்து சத்தியமும் மறைந்து விட்டது; அதை போட்டி அரசியல் தலைவர்களின் சொற்கள் பொதுமக்களின் மனதில் எவ்வித விளைவையும் ஏற்படுத்துவதுமில்லை என அவர் கூறினார்.

"நமது சகமக்களை நேசித்து வாழக் கற்றுக் கொள்வோமாக! தீமையை விட்டொழித்து நன்மையின் மீது நம்பிக்கை வைப்போமாக, தன்னுறுதி கொள்வோமாக" என வினோபா கூறினார்.

நாடெங்கிலிருந்து சுமார் 250 பிரதிநிதிகள் இம்மாநாட்டில் கலந்து கொள்கின்றனர். ஜெயப்பிரகாஷ் நாராயணனும் மாநாட்டில் பேசினார்.

## ஐ. நா. பார்வையாளர் கோஷ்டிமீது பாக். துருப்புகள் சுட்டன

### இந்தியப் பகுதிக்குள் அத்துமீறல் நடவடிக்கைகள்

ஜம்மு, செப். 24—

ஜம்மு மகாணத்தைச் சேர்ந்த நௌஷேராவில் முகாமிட்டிருக்கும் ஐ. நா. பார்வையாளர் கோஷ்டி யொன்றின்மீது செப். 21-ம் தேதி காலை பாகிஸ்தான் துருப்புகள் சுட்டனர் என்று அதிகார பூர்வமான செய்திகள் கூறுகின்றன.

தகவல்கள் மேலும் கூறுவதாவது:

திங்களன்று (செப். 21) இந்தியப் பகுதியிலிருந்து தானியப் பயிர்களை அறுத்துச் செல்லும் நோக்கத்துடன் பாகிஸ்தான் வசமுள்ள படரோ என்னுமிடத்திலிருந்து பாகிஸ்தான் துருப்புகள் புடைசூழ கிராமவாசிகள் கோஷ்டி யொன்று போர் நிறுத்த எல்லைக் கோட்டைத் தாண்டி இந்தியப் பகுதிக்குள் நுழைந்தது. அவர்கள் பயிர்களை அறுக்கத் தொடங்கியதும் இந்தியக் கிராமவாசிகள் எல்லைப் போலீசாரிடம் செய்தியை அறிவித்தனர். இந்தியப் போலீசாரைக் கண்டவுடன் அத்துமீறி உள்ளே நுழைந்தவர்கள் பாக். வசமுள்ள பகுதிக்குள் ஓடிவிட்டனர். ஆனால் பாக். துருப்புகள் இந்தியப் பகுதிக்குள்ளேயே தங்கி ஆக்கிரமித்துக்கொண்டனர். இந்த அக்கிரமத்தை ஐ. நா. பார்வையாளர்களிடம் இந்தியப் போலீஸ் அறிவித்தது. பாக். துருப்புகள் வாட்ஸாகத் தொடங்கினர். இருப்பினும் அவர்களில் ஒரு சிப்பாய் ஐ. நா. பார்வையாளர்கள் இருந்த திக்கு நோக்கிச் சுட்டான். இந்தியப் போலீஸ் அதிகாரிகளும் இதர ஐ. நா. பார்வையாளர்களும் எவ்வித உயிர்ச் சேதமும் ஏற்படவிடாது காத்தனர்.

## சீனப் பிரதமரும் ஜாப்.மாஜி பிரதமரும் பஞ்சசீல ஒப்பந்தம்

பீகிங், செப். 23—

ஜப்பானிய மாஜி பிரதமர் தனுன் இஷிபாஷியும் சீனப் பிரதமர் சூஎன்-லாயும் ஓர் நேச உடன்படிக்கை செய்துகொண்டனர். இஷிபாஷி தனது குழுவினருடன் செப்டம்பர் 9 முதல் 20வரை சீனாவில் சுற்றுப்பயணம் செய்து வருகிறார்.

ஜப்பானும் சீனாவும் உலக சமாதானத்துக்குப் பாடுபட வேண்டுமென்றும், பஞ்சசீல அடிப்படையில் இரு நாடுகளும் நேசவுறவு கொள்ள வேண்டுமென்றும், இதற்காக ஜப்பான் தனது மண்ணிலுள்ள அமெரிக்க ஆதிக்கத்தை ஒழிக்க வேண்டுமென்றும், இரண்டு சீனா என்று ஜப்பான் பேசுவதை நிறுத்த வேண்டுமென்றும், இரு நாடுகளும் அரசியல், பொருளாதார, கலாசாரத் துறைகளில் பரஸ்பரம் உதவி புரியவேண்டுமென்றும், இரு நாடுகளிடையே தொடர்புகள் அதிகரிக்க இருதரப்பினரும் பாடுபடுவதாகவும் உடன்பாடு செய்துகொண்டார்கள்.

—நவசீனச் செய்தி

## திருத்தம்

30-7-58 தேதிய "ஜனசக்தி" 4-ம் பக்கத்தில் "ஐயடக்குளம் கண்மாய் தகராறும் சர்க்கிள் இன்ஸ்பெக்டர் தாண்டவமும்" என்ற தலைப்பில் வெளிவந்துள்ள செய்தி ஆதாரமற்றதென்று தெரிய வருவதால் மேற்படி செய்தியை மேற்படி இதழில் பிரசுரித்ததற்காக மனமார வருந்துகிறோம்.

—ஆசிரியர்

## பாரபட்சமற்ற பகிரங்க விசாரணை கோருக!

### கம்யூனிஸ்ட் கட்சி மத்திய நிர்வாகக் கமிட்டி மக்களுக்கு வேண்டுகோள்

### உணவு மந்திரி பி.சி.சென் ராஜினாமா செய்யவேண்டுமென கோரிக்கை

கல்கத்தா, செப். 23—

**"அண்மையில் மேற்கு வங்கத்தில் நடைபெற்ற கொடூரமான போலீஸ் அடக்குமுறைக்கு எதிராக நல்ல உள்ளம் படைத்த நாட்டு மக்கள் அனைவரும் கண்டனக் குரல் எழுப்புங்கள்! போலீஸ் அட்டூழியங்கள் பற்றி பகிரங்க விசாரணை நடத்தப்படவேண்டுமென்று கோருங்கள்!"**

இவ்வாறு இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி தேசியக் கவுன்சிலின் மத்திய நிர்வாகக் கமிட்டி இன்று நிறைவேற்றிய ஒரு தீர்மானத்தில் நாட்டு மக்களுக்கு வேண்டுகோள் விடுத்துள்ளது.

வங்க உணவு இயக்கம் சம்பந்தமாக மே. வங்க போலீசின் மிருகத்தனமான அட்டூழியங்களுக்கு நிர்வாகக் கமிட்டி தன் கடுமையான கண்டனத்தைத் தெரிவித்தது. இது சம்பந்தமாகப் பாரபட்சமற்ற பகிரங்க விசாரணை நடத்தப்பட வேண்டுமென்று ஏற்கனவே வெளியிடப்பட்டுள்ள கோரிக்கைக்கு நிர்வாகக் கமிட்டி தன் முழு ஆதரவையும் தெரிவித்தது.

அனேகமாக கல்கத்தாவிலுள்ள ஒவ்வொரு பத்திரிகையும் உட்பட பொதுஜன அபிப்பிராயத்தின் எல்லாப் பகுதியினரும் அத்தகைய பகிரங்க விசாரணை வேண்டுமென்று கோரியுள்ள போதிலும், இந்த மிகவும் நியாயமான கோரிக்கையை மேற்கு வங்க சர்க்கார் இன்னும் மறுத்து வருவதைக் கண்டு நிர்வாகக் கமிட்டி மிகுந்த சீற்றமடைகிறது.

"ஒரு முழுக்க முழுக்க நியாயமானதும், ஜனநாயகபூர்வமானதுமான இயக்கத்தை ஒடுக்குவதற்காக வெறிபிடித்த முறையில் அது நடத்திய பேயாட்டத்தில் எண்ணற்ற மனித உயிர்களைப் பலிகொண்ட பின்னரும் இத்தகைய போக்கை ஒரு அரசாங்கம் கடைப்பிடிப்பதை எந்த நாகரிகமான சமுதாயமும் சகித்துக் கொண்டிருக்க முடியாது. நாட்டின் எதிர்கால நலவுரிமைகளைப் பாதுகாக்க வேண்டிய பெரு நோக்குடன் பார்க்கும்போது, ராஜ்ய சர்க்காரின் குற்றங்களை, ஏன் என்று கேட்காமல், அதற்கு அவர்கள் பதில் கூறும்படி செய்யாமல் விட்டுவிட முடியாது," என்றும் நிர்வாகக் கமிட்டியின் தீர்மானம் கூறுகிறது.

"ஆகஸ்ட் 31ம் தேதி யன்று சமாதான பூர்வமான, பிரம்மாண்டமான வெகுஜன ஆர்ப்பாட்டம் கல்கத்தாவில் நடைபெற்றபோது போலீசார் ஆர்ப்பாட்டக்காரர்களைச் சூழ்ந்து கொண்டு, எல்லாப் பக்கங்களிலிருந்தும் அவர்கள்மீது ஈவிரக்கமற்ற முறையில் தடியடிப் பிரயோகம் செய்தனர். மக்கள் எப்பக்கமும் தப்பிச் செல்ல முடியாதபடி செய்தனர்.

'போலீஸ் துப்பாக்கி பிரயோகங்கள், தடியடிப் பிரயோகங்கள், போலீஸ் லாக்-அப்புகளில் சித்திரவதை ஆகியவற்றின் காரணமாக கல்கத்தா, ஹௌரா, 24 பர்கானங்கள்—ஆகிய ஜில்லாக்களில் 6 நாட்களில் ஏராளமான மக்கள் (அதிகார பூர்வமற்ற தகவல்களின்படி 80 பேர் என்றும் சர்க்கார் தரப்புப்படி 43 என்றும் சொல்லப்படுகிறது) கொல்லப்பட்டுள்ளனர். மேலும் அந்த சம்பவங்கள் நடைபெற்ற தினங்களிலிருந்து காணாமல் போன ஏராளமான பேர் சம்பந்தமாக இன்னும் தகவலில்லை. அவர்களில் சிலராவது கொல்லப்பட்டிருப்பார்கள் என்று அச்சமடைவதற்குக் காரணங்கள் இருக்கின்றன. இறந்தவர்களின் சடலங்கள் போலீசாரால் அப்புறப்படுத்தப்பட்டு, அவை ரகசியமாக எரிக்கப்பட்டுள்ளன; அல்லது வேறு விதத்தில் பைசல் செய்யப்பட்டுள்ளன."

"உணவுப் பிரச்சினையைப் பொறுத்தமட்டில் ராஜ்ய சர்க்காரின் வழிகாட்டும் கொள்கை, சமூகவிரோத நபர்களுக்கு திட்டமிட்ட முறையிலும், நேரடியான முறையிலும் உடந்தையாயிருப்பது என்பதே", என்று கூறிய தீர்மானம், மேற்கு வங்க உணவு மந்திரி பி. சி. சென் உடனே ராஜினாமா செய்ய வேண்டுமென்று கோரியது. பொதுமக்களின் நன்மையை உத்தேசித்து மட்டுமின்றி நிர்வாகத்தின் நன்மையை உத்தேசித்தும் அவர் ராஜினாமா செய்யவேண்டியது அவசியம்.

"குறிப்பாக மத்திய அரசாங்க உணவு அமைச்சர் ஏ. பி. ஜெயின் ராஜினாமா செய்ததற்குப் பின்னர், அவர் (பி. சி. சென்) பதவியில் நீடிப்பது மக்களுக்குத் தொடர்ந்து மன உறுத்தலையே அளிக்கும்; உணவு பிரச்சினைக்கு எந்தப் புதிய, ஆக்கபூர்வமான நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படுவதற்கும் தடையாயிருக்கும்" என்றும் அத்தீர்மானம் கூறியது.

## வங்க விரிகுடாவில் மர்மத் திட்டு

### சோவியத் விஞ்ஞானிகள் சோதனை நடத்துவர்

பம்பாய், செப். 23—

வங்க விரிகுடாவிலுள்ள ஒரு 'மர்ம'த் திட்டுபற்றி சோவியத் விஞ்ஞானிகள் சோதனை நடத்தப் போகின்றனர். அந்த விஞ்ஞானிகள் இந்து மஹா சமுத்திரத்தில் பூமியின் காந்த சக்திபற்றி ஆராய்ச்சி நடத்த பம்பாய் வந்துள்ளனர்.

வங்க விரிகுடாவிலுள்ள மர்மத் திட்டைப்பற்றி சோதனை நடத்தினால் பூமியின் காந்த மண்டலம் பற்றி அதிக தகவல்கள் கிடைக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

ரஷ்ய விஞ்ஞானிகள் 'ஜார்ஜா' என்ற கப்பலில் வந்துள்ளனர். அக்கப்பல் ஒரு 'மிதக்கும் ஆராய்ச்சி கூடம்'. காந்த மண்டல ஆராய்ச்சி நடத்தக் கூடிய ஒரே கப்பல் இந்த ரஷ்ய கப்பல்தான். உலகில் வேறு எதுவும் கிடையாது. இந்த ரஷ்யக் கப்பலிலுள்ள கருவிகள் மூலம் காந்த மண்டலங்களைச் சுலபமாகக் கணிக்கவும் ஆராய்ச்சி செய்யவும் கூடும்.

## பீகார் கம்யூனிஸ்ட் எம். எல். ஏ.க்கள் வெளிநடப்பு

### அவசரத் தீர்மானத்திற்கு அனுமதி மறுப்பின் விளைவு

பாட்னா, செப். 24—

நேற்று பீகார் சட்ட சபையிலிருந்து தோழர் கார்யானந்த சர்மா தலைமையில் ஐந்து கம்யூனிஸ்ட் உறுப்பினர்கள் வெளிநடப்பு செய்தனர்.

திங்கட்கிழமையன்று தர்பங்காவில் பீகார் ராஜ்ய விலைவாசி உயர்வு, வரி உயர்வு கமிட்டியின் தொண்டர்கள் மீது தடியடிப் பிரயோகம் நடந்தது சம்பந்தமாக அவசரத் தீர்மானம் ஒன்று கொண்டுவர சபாநாயகர் அனுமதி மறுத்து விட்டதை ஆட்சேபித்தே கம்யூனிஸ்ட் உறுப்பினர்கள் வெளிநடப்புச் செய்தனர்.

## ஜனசக்தி நிதி

சிங்காநல்லூர், செப் 23—

சிங்காநல்லூர் தோழர் சின்னப்பன் தனது மகளின் திருமணத்தின் போது ஜனசக்தி நிதிக்கு ரூ. 10 நன்கொடையளித்தார்.

## "கடவுள், சோவியத் யூனியன் பக்கம் இருக்கிறார்"

### "அறிவுள்ளவருக்குச் சகாயம் புரிகிறார்" -குருஷ்சேவ்

கூன்ராபிட்ஸ், செப். 23—

கடவுள் அறிவுள்ளவருக்கு உதவி புரிகின்றார் என்றும் கடவுள் சோவியத் யூனியன் பக்கம் இருக்கிறார் என்றும் சோவியத் பிரதமர் குருஷ்சேவ் இன்று குறிப்பிட்டார்.

அவ்விதம் அவர் குறிப்பிட்ட சந்தர்ப்பம் வருமாறு:—

சோவியத் விவசாயிகள் கோஷ்டி ஒன்று அமெரிக்காவுக்கு விஜயம் செய்யவேண்டுமென்று பல வருஷங்களுக்கு முன்பு யோசனை கூறிய டெஸ் மாய்னெஸ் ரிஜிஸ்டர் அண்டு டிரிபியூன்' என்ற பத்திரிகையின் ஆசிரியர் லாரென்சோத் என்பவருக்குக் குருஷ்சேவ் அறிமுகம் செய்து வைக்கப்பட்டார்.

அப்பத்திரிகையின் யோசனைப்படி, சோவியத் விவசாயிகள் கோஷ்டி ஒன்று 1955-ல் அமெரிக்காவுக்கு விஜயஞ் செய்தது.

அப்பத்திரிகையின் ஆசிரியர் லாரென் சோத்தைக் குருஷ்சேவ் கட்டித் தழுவினார். குருஷ்சேவ் அந்த ஆசிரியரிடம் பின் வருமாறு கூறினார்: "டெஸ்மாய்னெஸ் ரிஜிஸ்டர் எங்கள் விவசாயிகள் அமெரிக்காவுக்கு விஜயம் செய்யக் காரணமான திட்டத்தைத் தோற்றுவித்ததற்காக அப்பத்திரிகையை நான் விசேஷ முறையில் பாராட்டுகிறேன்.

"அமெரிக்காவின் இப்பகுதியிலுள்ள மக்களாகிய நீங்கள் விவேகமும் புத்திகூர்மையும் வாய்ந்தவர்கள் என்று நான் கூற வேண்டும்.

"ஆனால் கடவுள் உங்களுக்கு அதிகம் சகாயம் புரிந்துள்ளார். அவர் உங்களுக்கு நல்ல பூமியைக் கொடுத்திருக்கிறார். ஆனால் கடவுள் உங்களுக்குமட்டுமே உதவி செய்கிறார்என்று நீங்கள் நினைக்கக் கூடாது. கடவுள் எங்களுக்கும் உதவிபுரிகிறார்".

குருஷ்சேவை உபசரிப்பவரான ராஸ்வெல் கார்ஸ்ட் ஒரு புன்முறுவலுடன் பின்வருமாறு கூறினார்:—"எங்களிடை ஒரு பழமொழி வழங்குகிறது. முயற்சியுடையவர்களுக்குக் கடவுள் உதவிபுரிகிறார் என்பதே அப்பழமொழி.

குருஷ்சேவ் கூறுவதாவது:—'எங்களுக்கும்நல்லவரான கடவுள் சகாயம்புரிகிறார். ஏனென்றால் நாங்கள் துரிதமாக முன்னேறுகிறோம். ஆகவே, கடவுள் எங்கள் பக்கம் இருக்கிறார். அவர் புத்தியுள்ளவருக்கு உதவி புரிகிறார்" (ராய்ட்டர்)

## பர்மா அரிசி

எர்ணாகுளம், செப். 24—

பர்மா அரிசி 5,700 டன்கள் ஏற்றிக்கொண்டு ஜகமித்ரா என்ற கப்பல் இங்கு வந்துள்ளது. இந்த அரிசி பூராவும் கேரளத்திற்கு ஒதுக்கப்பட்டுள்ளது.

இன்னும் எட்டாயிரம் டன்கள் பர்மா அரிசி ஏற்றிக்கொண்டு இன்னொரு கப்பல் ஞாயிற்றுக்கிழமை இங்கு வரும்.

## இலங்கையில் ரஷ்ய நிபுணர்கள்

### எஃகு பொருட் தொழிற்சாலை கட்ட ஆராய்ச்சி

கொழும்பு, செப். 24—

ஒரு டீல் ரோலிங் மில் (எஃகு பொருட்கள் தயாரிக்கும் ஆலை) கட்டுவதுபற்றி விவரங்கள் சேகரிக்க கமிட்டி யொன்றை இலங்கை அரசாங்கம் நியமித்துள்ளதாகக் கூறப்படுகிறது.

ரஷ்ய நிபுணர்களடங்கிய குழுவொன்று சென்ற மாதத்திலிருந்து இலங்கையில் சுற்றுப்பிரயாணம் நடத்தி வருகிறது. அத்தொழிற்சாலை நிறுவுவதற்குரிய தகுதியான இடத்தை தேர்ந்தெடுக்கும் வேலையில் ஈடுபட்டுள்ளனர். அவர்களின் அறிக்கையை அரசாங்கம் எதிர்பார்த்துக் கொண்டிருப்பதாகக் கூறப்படுகிறது. இத் தொழிற்சாலை கட்டுவதற்கு அரசாங்கம் முக்கியத்துவம் கொடுக்கிறதென்றும் 1961-ல் நடைபெற விருக்கும் பொதுத் தேர்தலுக்கு முன்னால் கட்டி முடித்துவிட முயற்சிப்பதாகவும் கூறப்படுகிறது.

## ஜன நெரிசலில் உயிரிழந்தோர் எண்ணிக்கை 58

ராஜ்கோட், செப். 24—

அம்ரேலி ஜில்லாவிலுள்ள ஜில்ஜகா கிராமத்தில் "சித்த" விநாயகர் மேளா ஒன்றில் ஜன நெரிசல் காரணமாக இறந்தவர்களின் எண்ணிக்கை 58 ஆக உயர்ந்துள்ளது.

சென்ற ஞாயிறன்று இந்த சம்பவம்நடைபெற்றது தெரிந்ததே.

## பாங்கி ஊழியர்கள் வெற்றி

### வேலைக்கு வை என்று சுப்ரீம் கோர்ட் தீர்ப்பு

புதுடில்லி, செப். 24—

எட்டு வருஷங்களாக கோர்ட்டு கோர்ட்டாக இழுக்கடிக்கப்பட்ட பாங்கி ஊழியர்கள் வழக்கில் சுப்ரீம் கோர்ட் இன்று சாதகமான தீர்ப்பு வழங்கியது.

டிஸ்மிஸ் செய்யப்பட்ட 136 ஊழியர்களை மீண்டும் வேலைக்கு வைக்க வேண்டும் என்று தொழில் அப்பீல் மன்றம் அளித்த தீர்ப்பை சுப்ரீம் கோர்ட் இன்று ஊர்ஜிதம் செய்தது.

ஒரு வேலை நிறுத்தத்தில் கலந்து கொண்டதற்காக 150 ஊழியர்களை பஞ்சாப் நேஷனல் பாங்கியின் நிர்வாகம் பழிவாங்கியதைத் தொடர்ந்து பாங்கி ஊழியர்கள் சங்கம் தொடர்ந்த வழக்கில்தான் இறுதி தீர்ப்பும் சாதகமாக வழங்கப்பட்டது.

## அமெரிக்க உதவிக்கு புது நிபந்தனை

### யு. எஸ். பொருள்கள் வாங்கவே உதவித்தொகை செலவிடப்படவேண்டுமாம்

### இந்திய சர்க்கார் கலக்கம்

நியூயார்க், செப். 23—

அபிவிருத்திக் கடனுதவி நிதியிலிருந்து கொடுக்கப்படும் தொகையுட்பட அமெரிக்க உதவித் தொகை பூராவையும் அமெரிக்கப் பொருள்களை வாங்கவே செலவிட வேண்டுமென்று அமெரிக்க சர்க்கார் புது நிபந்தனை விதிக்க யோசித்து வருகிறது. இதனால் அந்நிய செலாவணி போதிய அளவு இல்லாத இந்தியா போன்ற நாடுகளுக்கு பெரிய கலக்கம் ஏற்பட்டுள்ளது. ஏனெனில் அமெரிக்கப் பொருள்களை விட மலிவான விலையில் பிற நாடுகளிலிருந்து இவை இதுவரை பண்டங்களை வாங்கிவந்தன, இனி அவ்வாறு முடியாமற் போகும். அமெரிக்கப் பண்டங்களையே வாங்க வேண்டுமென்ற நிபந்தனை இதுவரையில் ஏற்றுமதி இறக்குமதி பாங்கியிலிருந்து பெறும் தொகைக்கு மட்டும் இருந்தது.

சென்ற 18 மாதங்களாக அமெரிக்காவிலிருந்து தங்கம் வேகமாக வெளி நாடுகளுக்குச் சென்று கொண்டிருக்கிறதாம். அதைத் தடுக்கவே இந்தப் புது நிபந்தனையாம்! ஏற்றுமதிமூலம் கிடைக்கும் வருமானத்தைவிட ஆண்டு தோறும் 400 கோடி டாலர் வெளிநாடுகளுக்கு இப்படிச்செல்கின்றனவாம். இந்தப் போக்கினால் டாலரின் மதிப்புக் குறைந்து அந்நிய டாலர் இருப்பு வைத்துக்கொண்டிருந்தவர்கள் அதைத் தங்கமாக மாற்ற முற்படுவர் என அவர்கள் அஞ்சுகின்றனர். அதனால்தான் இந்தப் புதிய நிபந்தனையாம்.

## விசேஷ இலக்கிய விற்பனை இயக்கம்

சென்னை, செப். 24—

வருகின்ற நவம்பர் 1 முதல் 22 வரை மூன்று வாரங்களை விசேஷ இலக்கிய விற்பனை வாரங்களாக நிர்ணயித்து, அவ்வாரங்களில் முற்போக்கு இலக்கியங்களையும், நூல்களையும் மக்களிடம் பெருவாரியாக விற்பனை செய்யும்படி சென்னை என். ஸி. பி. எச். (நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்) பிரசுராலயத்தார் வேண்டுகோள் விட்டுள்ளனர்.

அந்த விற்பனை இயக்கத்திற்கு உதவுவதற்காக புத்தகங்களின் விலைகளில் சில சலுகைகளையும் அறிவித்துள்ளனர்.

## காந்திஜியின் கடிதங்கள்

அகமதாபாத், செப். 24—

மகாத்மா காந்தி இந்திய சர்க்காருக்கு அவ்வப்போது எழுதிய கடிதங்களின் தொகுப்பு அக்டோபர் 2-ம் தேதி பிரசுரமாகும்.

1944 முதல் 47 முடிய அவர் எழுதிய கடிதங்களே இந்தத் தொகுப்பில் இடம் பெறும்.

நவஜீவன் பிரசுராலயத்தார் இத்தொகுப்பை வெளியிடுவர்.

ஜனசக்தி

சென்னை 25-9-1959

# சர்க்கரையோ, சர்க்கரை!

தேவைப்படுகிறவர்களெல்லாம் வந்து வேண்டிய அளவு வாங்கிக்கொள்ளுங்கள், என்று தெருவில் “சர்க்கரையோ, சர்க்கரை!” என்று யாரோ விற்றுக்கொண்டு போவதாக நினைத்துவிடாதீர்கள். “ஐயோ, சர்க்கரையே! நீ எங்கு சென்றாய்? ஏன் இவ்வளவு உயரத்தில் போய் உட்கார்ந்துகொண்டுவிட்டாய்?” என்று உள்ளம் நொந்து ஊரெல்லாம் கேட்கும்படியாக வைத்துவிட்டார்கள், நம்முடைய காங்கிரஸ் ஆட்சியாளர்களும், கொள்ளை லாப, பதுக்கல், வர்த்தக சூதாட்டக்காரர்களும்!

ஒரு விசை சர்க்கரையின் நிர்ணய விலையோ ரூ. 1-63 ஆனால் இன்று இந்த விலையில் சர்க்கரை கிடைப்பது குதிரைக் கொம்பைப் பார்ப்பது போல! வெளி மார்க்கெட்டில் சென்னை நகரத்திலும் சரி, மற்ற இடங்களிலும் சரி ரூ. 3 வரையிலும் விற்கிறது.

டி. யு. சி. எஸ். கடைகளில் விசை ரூ. 1-63க்கு விற்கப்படுகிறது. ஆனால் அது வாங்குவதற்கு நீண்ட ‘க்யூ’ வரிசையில் பல மணி நேரம் நிற்க வேண்டும். அதுவும் கொஞ்சம் பேருக்கு மட்டும் ஒரு பவுண்டு, அல்லது அரைப்பவுண்டு கிடைக்கும். பெரும்பான்மையோர் சர்க்கரையின்றித் திரும்பிப்போகும் நிலை. சர்க்காரின் நிர்ணய விலைக் கடைகளிலிருந்தும் கூட சர்க்கரை கருப்பு மார்க்கெட்டுக்குச் செல்கிறது என்று கூறப்படுகிறது.

சர்க்கரை விலை விஷமென ஏறிவருவதைத் தடுப்பதற்கு சர்க்கார் சுண்டு விரலைக்கூட அசைக்கவில்லை என்பது கண்கூடு. சரியான வினியோக ஏற்பாடுகளைத்தான் செய்தார்களாவென்றால் அதுவும் கிடையாது.

நிர்ணய விலைகளில் 6000 கடைகளில் சர்க்கரை விற்பனை செய்யப்படுவதாக நமது ராஜ்ய உணவு, விவசாய அமைச்சர் திரு. பக்தவத்சலம் பெருமையடித்துக் கொள்கிறார். ஆனால் இது வெறும் கண்துடைப்பு வேலையே அன்றி வேறல்ல. கிராமப் பகுதிகளில் பல இடங்களில் சர்க்கரையே கிடைப்பதில்லை.

பல நகரங்களில் சர்க்கரை விலை உயர்வால் தேநீர், காப்பி பானங்களுக்கு விலைகள் உயர்த்தப்பட்டுவிட்டன.

இவ்வளவு நெருக்கடியான நிலைமை ஏற்பட்டிருந்தும், நேற்றுதான் சென்னைக் கலெக்டர் சில்லரை வியாபாரிகள் யார், யார் என்று பதிவு செய்துகொள்ளும்படி கோரியுள்ளார் என்று தெரியவருகிறது. இதர ஜில்லா கலெக்டர்களும் இவ்வாறு கோரியுள்ளனர், என்றும் தெரிகிறது. இந்தப் பட்டியலை எப்பொழுது தயாரித்து முடித்து, விலைகளை எப்பொழுது குறைக்கப்போகிறார்கள்?

சர்க்கரை உற்பத்தியாளர்களும், ஸ்டாக் வைத்திருப்பவர்களும், மொத்த வியாபாரிகளும் நடத்தும் பதுக்கலும், கொள்ளைலாப வேட்டையுமே இந்த விலை உயர்வுக்குக் காரணம் என்பது தெட்டத் தெளிவு.

ஆகவே சர்க்கார் உடனடியாக, விலைகளைக் குறைப்பதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள வேண்டும். நிர்ணய விலைக்கு மேல் விற்பவர்களும், பதுக்கல்காரர்களும் தண்டனைக்குள்ளாவார்கள் என்று அறிவிக்க வேண்டும். அப்படி மீறி விற்பவர்களைக் கையும், மெய்யுமாகப் பிடித்து தண்டனையும் கொடுத்து, அதை பகிரங்கமாக அறிவிக்கவும் வேண்டும். தங்குதடையின்றி சர்க்கரை வினியோகத்திற்கான உத்திரவாதம் செய்ய வேண்டும்.

ஒவ்வொரு கடைக்கும் கொடுக்கப்படும் கோட்டா சர்க்கரை முழுவதும் நிர்ணய விலையில் விற்கப்படுகிறதா என்பதைக் கண்காணிக்க சர்க்கார் பொது மக்களின்—சர்க்கரை உபயோகிப்பவர்களின் ஒத்துழைப்பை நாட வேண்டும்.

இத்தகைய நடவடிக்கைகளை அரசினர் மேற்கொள்ளும்படி மக்கள் தீவிரக் கிளர்ச்சியிலிறங்க வேண்டும்.

## மருத்துவ மனைகளின் அவல நிலை!

அண்மையில் சென்னை மேல் சபையில் தமிழக மருத்துவ மனைகள் (ஆஸ்பத்திரிகள்) சம்பந்தமாக நடைபெற்ற விவாதம், மருத்துவ மனைகளில் இன்றுள்ள சீரழிவு நிலைமையை நன்கு படம் பிடித்துக் காட்டுகிறது.

ஒரு நாட்டின் வாழ்க்கையே அந்த நாட்டில் வாழும் மக்களின் உடலாரோக்கியத்தைப் பொறுத்தது. அதைப் பொறுத்துத்தான் நாட்டின் சகல முன்னேற்றமும் அமைந்துள்ளது. ஆதலால்தான் சகல நாகரக அரசாங்கங்களும் மருத்துவ மனைகள், மருத்துவக் கல்லூரிகள் ஆகியவை சரிவர செயல்படுவதற்கு முதலிடம் கொடுத்து வருகின்றன.

ஆனால் காங்கிரஸ் அரசினரின் கீழ் இதர பல ஜீவாதாரமான பிரச்சினைகளைப்போல் இந்தப் பிரச்சினையும் உரிய கவனம் செலுத்தப்படாமல் புறக்கணிக்கப்பட்டு வருகின்றது.

உதாரணமாக, சமீபகாலமாகத் தலைநகரிலுள்ள அரசாங்க மருத்துவ மனைகளின் தரம் வெகுவாகச் சரிந்துள்ளது. தலைநகரிலேயே இந் நிலைமை என்றால், இதர ஜில்லா நகரங்களிலுள்ள மருத்துவ மனைகளின் நிலைமையைப் பற்றிக் கூறவேண்டிய அவசியமேயில்லை.

இந்த அமைப்புகள் மக்களின் சுகாதாரத்தின் கேடயங்களாக விளங்குவதற்குப் பதிலாக, ஒரு சில உயர்தர உத்தியோகஸ்தர்களுடையவும், அவர்களின் விருப்பத்திற்குப் பாத்திரமான காண்ட்ராக்டர்களுடையவும் லாபவேட்டைக் களங்களாக மாறியிருப்பது கண்டு ரத்தக் கண்ணீர் சிந்தவேண்டிய நிலையிலுள்ளோம். இதை எண்ணுந்தோறும், எண்ணுந்தோறும் நெஞ்சம் பதைபதைக்கிறது.

இம் மனைகளில் உடல் நலம் பாதிக்கப்பட்டோரின் உணவுக்காக வரவழைக்கப்படும் பால், பழங்கள் இதர உணவுப் பொருள்கள், இவற்றிலேயே தயாரிக்கப்படும் வியாதியஸ்தர்களுக்கான உணவு ஆகியவற்றைப் பரிசோதனை செய்துபார்த்தால், மேலே கூறிய குற்றச்சாட்டு முற்றும் நிரூபணமாகும்.

மேலும், சிகிச்சைக்கென்று இம் மருத்துவமனைகளில் வாங்கி சேமிக்கப்படும் மருந்துவகைகள், சிகிச்சைக்கான உபகரணங்கள் ஆகியவை கள்ளக்கடத்தல் வேறே செய்யப்படுகின்றன. சிகிச்சைக்கு வரும் வியாதியஸ்தர்களில் பலர், அவர்களுக்குக் கொடுக்கப்படவேண்டிய மருந்துகளுக்காகப் பணம் கொடுக்கும்படியும் நிர்ப்பந்தப்படுத்தப்படுகின்றனர்.

எல்லாவற்றிற்கும் சிகரம் வைத்தாற்போன்றது, வியாதியஸ்தர்களுக்கு அளிக்கப்படும் சிகிச்சை முறையும், அவர்கள் நடத்தப்படும் விதமும். ஆஸ்பத்திரியிலேயே தங்கி சிகிச்சை பெறும் ஒரு வியாதியஸ்தரிடம் சில நிமிட நேரம் பேசிப்பார்த்தால் நிலைமையின் கோரத் தன்மை தெட்டென விளங்கும்.

மருத்துவமனையில் பணியாற்றுபவர்களில் பெரும்பாலோரிடம் வர்த்தக நோக்கு வேகமாக அதிகரித்துவருவது கண்கூடு. பெரும்பகுதி உயர்தர டாக்டர்களெல்லாம் சொந்தமாகவும் வைத்திய நிலயங்கள் வைத்துக்கொண்டுள்ளனர். அவர்கள் வியாதியஸ்தர்களின் பரிசோதனையை சர்க்கார் செலவில் அரசாங்க மருத்துவ மனைகளில் முடித்துக்கொண்டு, பிறகு அவர்களைத் தங்கள் சொந்தக் ‘கிளினிக்’குகளுக்குக் கொண்டுபோய் சிகிச்சை செய்து, பணம் பெற்றுக்கொண்டுவிடுகின்றனர்.

நிற்க, ஆஸ்பத்திரிகளில் நடத்தும் பரிசோதனைகள் மோசடியாக இருக்கின்றன. ரத்த பரிசோதனை செய்யாமலேயே பல வியாதியஸ்தர்களின் ரத்தத்தைப் பற்றிய விபரங்கள், அறிவிப்புப் பலகையில் எழுதிவைக்கப்பட்டு விடுகின்றன என்றும்கூடக் கூறப்படுகிறது.

[illegible]

# சமாதான சக வாழ்வு

## குருஷ்சேவ் கட்டுரை

“வெளி நாட்டு விவகாரங்கள்” என்ற அமெரிக்க சஞ்சிகையில், “சமாதான சகவாழ்வு பற்றி” என்ற தலைப்பில் சோவியத் பிரதமர் குருஷ்சேவ் எழுதியுள்ள கட்டுரை ஒன்று வெளியாகியுள்ளது. இந்தக் கட்டுரையை “பிராவ்தா” “இஸ்வெஸ்தியா” பத்திரிகைகள் வெளியிட்டுள்ளன. அமெரிக்க சஞ்சிகையின் ஆசிரியர் குழுவினரின் வேண்டுகோளின்பேரில் எழுதப்பட்ட கட்டுரை இது.

இக்காலத்தில், சமாதான சகவாழ்வுப்பிரச்சினையானது [illegible] குறிப்பிடுகிறார் குருஷ்சேவ்.

இரு வழிகள்தான் உண்டு: ஒன்று யுத்தம் (ராக்கெட், நீர் வாயு குண்டு சகாப்தத்தில் யுத்தத்தின் விளைவாக எல்லா நாடுகளுக்கும் மிகவும் பயங்கரமான விளைவுகளே ஏற்படும்) மற்றொன்று சமாதான சகவாழ்வு என்று குருஷ்சேவ் வலியுறுத்துகிறார்.

[illegible]

### இயல்பான தன்மை

[illegible]

### பிரச்சினையும் குழப்பமும்

[illegible] முதலாளித்துவ அமைப்பைவிட முற்போக்கான அமைப்பு என்பதனாலேயே நாங்கள் சோஷலிஸ அமைப்பின் வெற்றி குறித்து முழு நம்பிக்கைக் கொண்டுள்ளோம் என்று குருஷ்சேவ் எழுதுகிறார். 42 வயதான சோவியத் நாடு, 150 வயதான முதலாளித்துவ அரசான அமெரிக்காவை இதற்குள்ளாகவே பொருளாதாரப் போட்டிக்கு வருமாறு சவால் விடுத்துள்ளது.

தூரதிருஷ்டியுடைய அமெரிக்கத் தலைவர்கள் சிலர், சோவியத் யூனியன் அமெரிக்காவைத் துரிதமாக எட்டிப்பிடித்து வருகிறது என்றும், இறுதியில் அது அமெரிக்காவைவிட முன்னேறிவிடும் என்றும் ஏற்றுக்கொள்கின்றனர்.

அமெரிக்காவின் பல முக்கிய அரசியல் தலைவர்களும், பொது ஜனப் பிரமுகர்களும் சோவியத் யூனியனில் சுற்றுப்பிரயாணம் செய்தபோது, ஒரு புறத்தில் சோவியத் மக்களுக்கும், மறுபுறத்தில் கம்யூனிஸ்டு கட்சிக்கும் சோவியத சர்க்காருக்கும் இடையே பிளவையும் மோதலையும் ஏற்படுத்தி, கம்யூனிஸத்திற்கு எதிராக சோவியத் மக்களை ஆர்த்தெழும்படிச் செய்வதற்கு ஒருக்காலும் முடியாது என்பதை நேரடியாக அவர்களே புரிந்து கொள்வதற்குப் பூரண சந்தர்ப்பம் கிடைத்தது. எனவே, கம்யூனிஸத்தை “உருட்டிப் பின்னுக்குத் தள்ளுவது” என்ற கொள்கைக்குப் புத்துயிர் அளிப்பதற்காக இடையறாது செய்யப்பட்டுவரும் முயற்சிகளுக்கு நாம் என்ன காரணம் கூறுவது? அவர்களின் மனத்தில் இருப்பதுதான் என்ன? சோஷலிஸ நாடுகளின் உள்விவகாரங்களில் ஆயுதமேந்திய தலையீட்டை நடத்தலாம் என்ற எண்ணமா? ஆனால், கிழக்கிலும் மேற்கிலும் உள்ள மக்கள் அனைவருமே, இன்றுள்ள நவீன ராணுவப் போர் முறைகளின் சூழ்நிலையில், இத்தகைய நடவடிக்கைகள், தயவு தாட்சண்யமற்ற உடனடி எதிர் நடவடிக்கையைத் தூண்டிவிடும் என்பதை முற்றிலும் உணர்ந்துள்ளனர்.

### மூன்றாவது வழியில்லை

எனவே, நாம் ஆரம்பித்த இடத்திற்கே திரும்பி வருகிறோம். அதாவது நமது காலத்தில் இரு வழிகள்தான் உண்டு. ஒன்று சமாதான சகவாழ்வு; மற்றொன்று வரலாறு கண்டறியாத படு பயங்கரமான நாசகார யுத்தம். மூன்றாவது வழி எதும் இல்லை.

மாறுபட்ட சமுதாய அமைப்புகளையுடைய அரசுகள் சமாதான சகவாழ்வு வாழ்வது பற்றிய பிரச்சினை, அவசரப் பிரச்சினையாகிவிட்டது என்று குருஷ்சேவ் சுட்டிக்காட்டுகிறார். மனித சமுதாய வாழ்வில் யுத்தத்தை இறுதியாக ஒழித்துக் கட்டுவதற்கான உண்மையான வாய்ப்பு ஏற்படுத்தக்கூடிய ஒரு காலகட்டத்தை தற்பொழுது மனிதகுலம் நெருங்கிவிட்டது.

மற்றொரு உலக யுத்தம் ஊழ்வினைபோல் தவிர்க்க முடியாததல்ல என்றும், இனி யுத்தம் ஏற்படாமல் தடுத்து நிறுத்துவது சாத்தியம் என்றும் கூறுவதற்கு இடமுண்டு. இரண்டாவது உலக யுத்தத்திற்குப் பிறகு சர்வதேச அரங்கில் பல்வேறு சக்திகளுக்கிடையே புதிதாக ஏற்பட்டுள்ள பரஸ்பர பலாபலமே, இவ்வாறு கூறுவதற்கு ஆதாரமாகும் என்று குருஷ்சேவ் எழுதுகிறார்.

### மூன்று அத்தாட்சிகள்

மேலும் இதைக் கருத்திற்கு மூன்று அடிப்படையான அத்தாட்சிகளையும் கட்டுரை வழங்குகிறது.

முதலாவதாக: நமது காலத்தில் சோஷலிஸ அரசுகள் மட்டுமின்றி, சுயேச்சையான தேசிய அரசுரிமையை நிலைநாட்டும் பாதையில் இறங்கியுள்ள பல ஆசிய, ஆப்பிரிக்க நாடுகளும், ஆக்கிரமிப்பு ராணுவக் கூட்டணிகளில் சேராதுள்ள மற்றும் பல நாடுகளும் சமாதானத்திற்காக செயல்வன்மையுடன் போராடி வருகின்றன.

இரண்டாவதாக: சமாதானக் கொள்கைக்கு, உலக முழுதுமுள்ள விரிவான பொதுஜனப் பகுதிகளின் சக்திவாய்ந்த ஆதரவு இருந்து வருகிறது;

மூன்றாவதாக: சமாதானம் விரும்பும் சோஷலிஸ நாடுகள், ஆக்கிரமிப்பாளர்களின் கையைத் தடுத்து நிறுத்தவல்ல மிகவும் சக்திவாய்ந்த பௌதிக ஆயுதங்களைப் பெற்றுள்ளன.

தற்பொழுது சோஷலிஸ அரசுகள் உலகப் பரப்பில் சுமார் நான்கில் ஒரு பகுதி பிரதேசத்தையும், உலக ஜனத்தொகையில் மூன்றில் ஒரு பங்கையும், உலகத் தொழில் உற்பத்தியில் சுமார் மூன்றில் ஒரு பங்கையும் பெற்றுள்ளன என்று கட்டுரை சுட்டிக்காட்டுகிறது.

கடந்த பல ஆண்டுகள் பூராவிலும் ஏதாவது ஒரு இடத்தில் சமீப கிழக்கிலோ, ஐரோப்பாவிலோ, தூரகிழக்கிலோ, தென்கிழக்கு ஆசியாவிலோ யுத்த வெடிப்பின் மூலப்பீடங்கள் பல மாறிமாறித் தோன்றியபோதெல்லாம், அவை உடனுக்குடன் அப்புறப்படுத்தப்பட்டன; இந்த மறுக்கமுடியாத உண்மைக்கான விளக்கம் மேலே கூறப்பட்டவையேயாகும்.

### உடன்பாடு காண வாய்ப்பு

குருஷ்சேவ் மேலும் எழுதுவதாவது: செப்டம்பரில் நான் அமெரிக்காவிற்குப் போகப்போவதின் விளைவாயும், அதன் பிறகு ஜனாதிபதி டிவைட் ஐசனோவர் சோவியத் யூனியனுக்கு வருவதன் விளைவாயும் பயனுள்ள கருத்துப் பரிவர்த்தனைகள் நடைபெறுவது சாத்தியமாகும் என்றும், பைசல் செய்யப்படவேண்டிய பிரச்னைகள் குறித்து ஒரு பொதுவானபோக்கையும் உடன்பாட்டையும் காண்பதற்கு வாய்ப்பு ஏற்படும் என்றும் நான் எதிர்பார்க்கிறேன்.

எனவே, முன்பு போலவே இப்பொழுதும்கூட நாங்கள், சோவியத் யூனியனுக்கும் இதர நாடுகளுக்கும் இடையே—குறிப்பாக சோவியத் யூனியனுக்கும் அமெரிக்காவிற்கும் இடையே—உள்ள உறவுகள், நட்புறவின் அடிப்படையிலும் சமாதான சகவாழ்வுக் கோட்பாடுகளுக்கு முற்றிலும் ஏற்புடைய முறையிலும் அமையப் பெற்றிருக்க வேண்டும் என்பதற்காக எங்களால் ஆனது அனைத்தையும் செய்யச் சித்தமாய் உள்ளோம் என்று குருஷ்சேவ் மேலும் எழுதுகிறார்.

### மறுக்கமுடியாத உண்மை

கிழக்கிற்கும், மேற்கிற்கும் இடையே உள்ள உறவுகளில் சமாதான சகவாழ்வுக் கோட்பாடுகளை, அசைக்கமுடியாத சர்வதேச நியதியாகவும் அன்றாட நடைமுறை விதியாகவும் ஆக்கவேண்டும் என்றால், வரலாற்றின் நிகழ்ச்சிப் போக்குகளைத் தலைகீழாக மாற்றுவது முடியாது என்ற மறுக்கமுடியாத உண்மையை அனைவரும் புரிந்துகொள்வது அவசியம் என்று குருஷ்சேவ் வலியுறுத்துகிறார். சோஷலிஸ அமைப்பானது, அதன்மீது தொடுக்கப்பட்டுள்ள அத்தனை தாக்குதல்களையும் சமாளித்துக்கொண்டு, வளர்ந்து வலிமைபெற்று விட்டது. கடந்தகால அமைப்பிற்கு அதை இழுத்துச் செல்வதை அசாத்தியமாக்கும் அளவிற்கு அதன் வல்லமை பெருகிவிட்டது.

நாம் யாவரும் நமது நாடுகளுக்கிடையிலுள்ள உறவுகளை அபிவிருத்தி செய்துகொள்ள விரும்பினால், சர்வதேச வர்த்தகத்திலுள்ள எல்லா தடைகளையும் அகற்றவேண்டும் என்று குருஷ்சேவ் சுட்டிக்காட்டுகிறார். சமாதான சகவாழ்வை ஆதரிப்போர், வர்த்தகமும் பொருளாதாரத் தொடர்புகளும் வளர்ந்தோங்குவதை ஆதரிக்காமல் இருக்கமுடியாது.

### குருஷ்சேவ் கேள்வி

மனிதகுலமானது மகத்தான கண்டுபிடிப்புகள் பலவற்றைச் சாதித்து அண்ட வெளியைக் கூட வெல்வதற்கான ஆரம்ப நடவடிக்கைகளை மேற்கொள்ளும் ஆற்றல் பெற்றுள்ள இக்காலகட்டத்திலே, இந்தப் பிரம்மாண்ட அறிவாற்றல் சாதனைகளைப் பயன்படுத்திக்கொண்டு அது, உலகில் மனிதனின் நன்மைக்காக நிலையான சமாதானத்தை நிலைநாட்ட சக்தியற்றதாக இருக்கமுடியுமா? என்று சோவியத் பிரதமர் கேட்கிறார்.

சோவியத் மக்கள் யுத்தத்தை விரும்பவில்லை என்று பல முறை கூறியுள்ளனர், இப்பொழுதும் கூறுகின்றனர் சோவியத் யூனியனும், அதனுடன் நேசம் கொண்டுள்ள நாடுகளும் தாக்கப்படாவிட்டால் நாங்கள் அமெரிக்காவிற்கு எதிராகவோ அல்லது வேறெந்த நாடுகளுக்கும் எதிராகவோ ஒருக்காலும் எவ்விதமான ஆயுதங்களையும் பிரயோகிக்கமாட்டோம் என்று குருஷ்சேவ் எழுதுகிறார். மனித சமுதாயத்தில் யுத்தப் பேயை அறவே ஒழிக்கவேண்டும் என்று நாங்கள் விரும்புவதால்தான், சமாதானபூர்வமான உன்னதப் போட்டிக்கு வருமாறு நாங்கள் மேலைய அரசுகளை வேண்டுகிறோம்,

பிற நாடுகளின் உள்விவகாரங்களில் தலையிடக்கூடாது என்பதே ஆரம்ப முதல் எங்கள் கொள்கை, இன்றும் அதுவே எங்கள் கொள்கை என்று குருஷ்சேவ் எழுதுகிறார். இந்த நிலையிலிருந்து நாங்கள் இம்மியும் தவறியதில்லை; இனியும் தவறமாட்டோம்.

சமாதானத்திற்கும் இன்றுள்ள கெடுபிடியிலிருந்து வெளியேறுவதற்கும் ஒரேயொரு வழிதான் உண்டு. அதுதான் சமாதான சகவாழ்வு.

—டாஸ்

# நாடும் நடப்பும்

## ராஜாஜியின் அங்குரார்ப்பணம்!

ஒரு புத்திசாலிப் பெரிய மனிதர் இருந்தாராம். அவரது பையனை ஏன் படிக்கவைக்கவில்லை என்று கேட்டதற்கு “அவன் பணம் செலவழித்துப் படித்து இன்னும் இருபது வருடம் கழித்து சம்பாதித்துப் போட்டது இருக்கட்டும். இப்பொழுது மாடு மேய்க்கப் போகட்டும்” என்றாராம்.

திருவல்லிக்கேணி கடற்கரையில் மெழுகுவர்த்திக் கட்சி (சுதந்திரா கட்சி)யின் கூட்டம் நடைபெற்றது. ராஜாஜி மற்றொரு “வேண்டாம்” கோஷத்தை அங்குரார்ப்பணம் செய்தார். இந்தியாவில் அணுசக்தி மின்சார நிலயம் ஒன்று கட்டப்போகிறார்கள் 50 கோடி ரூபாய் வரை செலவழியுமாம். அப்படிச் செலவழித்துக் கட்டினாலும் 15 வருடங்கள் கழித்துத்தான் பயன் தருமாம். எனவே அம் மின்சார நிலயமும் வேண்டாம்; அது போன்று செலவாகும் பெரிய திட்டங்களும் வேண்டாம் என்றாராம்! மெழுகு வர்த்திக் கட்சி போகிற போக்கைப் பார்த்தால் “வேண்டாம்! வேண்டாம்!” என்பதே அதன் பிரதான கோஷமாகிவிடும்போல் தோன்றுகிறது! ராஜாஜி சுதந்திரத்திற்காகப் பாடுபட்டவர், ‘வந்தேமாதரம்’ என்று கோஷம் போட்டவுடனேயா சுதந்திரம்வந்துவிட்டது? பொதுத்துறையை எதிர்ப்பதற்காக ராஜாஜி இப்படி சுற்றி வளைத்துப் பேசுகிறார் என்பது தெரியாததா என்ன? ராஜாஜியை நினைக்கும்போது புத்திசாலிப் பெரிய மனிதரின் கதைதான் நினைவுக்கு வருகிறது.

## தலைவர்கள் கட்சி!

மெழுகு வர்த்திக் கட்சி மக்களைக் கவருவதைவிட ‘பெரிய மனிதர்களைத்தான் அதிகம் கவர்ந்திருக்கிறது’ என்று ‘சங்கர்ஸ் வீக்லி’ கேலிச் சித்திரம் தீட்டிக் காட்டியிருந்தது நூற்றுக்கு நூறு உண்மை! பீகாரில் ஒரு ‘தலைவர்’ கூண்டோடு மெழுகுவர்த்திக்கட்சியில் சேர்ந்திருக்கிறார். அவர்தான் ஜனதா கட்சித் தலைவர் ஸ்ரீமான் ராம்கர் மகாராஜா! ஜமீன் ஒழிப்பிற்குப் பின்னரும் பல்லாயிரம் ஏக்கராவிற்கு ராஜா அவர்! அவரது கட்சியிலிருக்கும் ஜனங்களெல்லாம் சாதாரணமானவர்களல்ல. ஒவ்வொருவரும் ஒரு குட்டி ராஜா! அல்லது நிலப்பிரபு! ஜமீன் ஒழிப்பை எதிர்ப்பதற்குத்தான் அவர் கட்சி சேர்த்தார்! அக்கட்சியிலிருக்கின்ற ஒவ்வொருவரும் ஆயிரக்கணக்கான விவசாயக் கூலிகளுக்கும், குத்தகைவார விவசாயிகளுக்கும் தலைவர்கள். மெழுகு வர்த்திக் கட்சி ஆரம்பித்த நேரம் பாருங்கள்! அக்கட்சியில் சாதாரண கந்தனும் சுப்பனும் சேருவதேயில்லை மாஜி ராஜாக்கள், ஜமீன்தார்கள் நிலப்பிரபுக்கள், மில் முதலாளிகள் இவர்கள்தான்!

## தேவை! தேவை!

இந்தியாவில் மாஜி நவாபுகளும், சுல்தான்களும் இல்லாமல் போனது மெழுகுவர்த்திக் கட்சிக்கு ஒரு பெரும் குறை! டில்லியில் மாஜி நவாபுகள் இருந்திருந்தால் இதற்குள் மெழுகுவர்த்திக் கட்சியின் கிளை ஒன்றை கொளுத்தி வைத்திருப்பார்கள்! அதாவது ஆரம்பித்து வைத்திருப்பார்கள்! இப்பொழுது ராஜாஜியே டில்லியில் ஆட்களை வலை வீசிப் பிடிக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டுவிட்டது. டில்லியில் கிளை ஆரம்பிக்கச் சொல்லி தம் நண்பர்களுக்கு கண்ணீரால் கடிதம் எழுதியிருக்கிறாராம். ஒரு மில் முதலாளியைத்தான் மலைபோல் நம்பி இருந்தாராம். அவர் தூரத்திலிருந்து வேண்டுமானால் உதவி செய்கிறேன் என்று எழுதிவிட்டாராம். தூரத்து உதவியென்றால் துட்டு உதவி என்று அர்த்தம்! ராஜாஜி ஏன் இவ்வளவு தூரம் கைவலிக்க கடிதம் எழுதவேண்டும்? “தேவை! தேவை! டில்லியில் மெழுகுவர்த்திக் கட்சி ஆரம்பித்துவைக்க ஒரு மில் முதலாளி அல்லது ஆயிரம் ஏக்கரா அதிபர் தேவை! மாஜி ஜமீன்தார்கள், ராஜாக்களின் விண்ணப்பம் விசேஷமாகக் கவனிக்கப்படும்” என்று ‘கல்கி’யிலும், ‘சுயராஜ்யா’விலும் விளம்பரம் செய்யலாம்.

## ஜெயப்பிரகாஷின் வாக்கு தானம்!

மாஜி பி. எஸ். பி. தலைவரும், இன்றைய பூமி தானத் தலைவருமாகிய ஸ்ரீமான் ஜெயப்பிரகாஷ் நாராயணன் மெழுகு வர்த்திக் கட்சிக்கு வாக்கு தானம்தர முன்வந்திருக்கிறார். பீகாரில் மெழுகு வர்த்திக் கட்சி உருவாவதில் இருவருக்கும் பங்குண்டாம். அண்மையில் பாட்னாவில் நடைபெற்ற கூட்டமொன்றில் பேசுகையில் சுதந்திரா கட்சியை ஆதரிக்குமாறு தமது சீடகோடிகளை சூசகமாகக் கேட்டுக்கொண்டாராம்! சென்னையில் மெழுகுவர்த்திக் கட்சி ஆரம்ப விழாவில் ஜெயப்பிரகாஷ் கலந்துகொண்டார். பின்னர் பெங்களூரில் பேசும்பொழுது ஆசீர்வதித்தார். இப்பொழுது பூமிதான மேடைகளில் நின்றுகொண்டு மெழுகுவர்த்திக் கட்சிக்குப் பிரச்சாரம் செய்கிறார். மெழுகு வர்த்திக் கட்சியோ நிலப்பிரபுத்துவம் வாழவேண்டுமென்கிறது. பூமிதான இயக்கமோ நிலம் சமுதாயத்திற்குச் சொந்தமென்கிறது ஸ்ரீமான் ஜெயப்பிரகாசரின் சித்து விளையாட்டை பூமிதான ஊழியர்கள் உணரவேண்டும்.

வானத்தில் வட்டமிடுகின்ற கழுகிற்கு கீழே இருக்கின்ற எலியின் மீதுதான் கண். ஸ்ரீமான் ஜெயப்பிரகாஷ் எந்த மேடையில் நின்றாலும் கம்யூனிச எதிர்ப்பின்மீதுதான் கவனமெல்லாம்! பி. சோ. மேடையில் பலமில்லாததால் சர்வோதய மேடைக்குத் தாவினார். இப்பொழுது சர்வோதய மேடையிலிருந்து மெழுகு வர்த்திக் கட்சி மேடைக்குத் தாவினாலும் தாவலாம்! ‘எதிர்பாருங்கள்’ பட்டியலில் இதனையும் சேர்த்து வைப்போம்.

—துருவன்

# குருஷ்சேவின் ஆயுத பரிகரண திட்டம் இருதய சுத்தி வாய்ந்தது

## அமெரிக்க ஜனநாயக கட்சித் தலைவர் வரவேற்பு

வாஷிங்டன், செப். 23—

இன்று குருஷ்சேவுடன் 40 நிமிஷம் சம்பாஷணை நடத்தியதாகவும் அதன் விளைவாக ஆயுத பரிகரணம் குறித்து நம்பிக்கை ஏற்படுகிறதென்றும் அவ்வித நம்பிக்கை ஏற்படுவது இதுவே முதல் தடவை என்றும் ஜனநாயக கட்சித் தலைவர் அட்லாய் ஸ்டீவென்சன் செய்தி நிருபர்களிடம் அறிவித்தார்.

ஸ்டீவென்சன் மேலும் கூறியதாவது, “ஒரு வருஷத்திற்கு முன்பு நான் இதே சோவியத் பிரதமரிடம் பேசினேன் அப்பொழுது எனக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. இன்று நான் குருஷ்சேவுடன் பேசியதன் விளைவாக எனக்கு அதிக நம்பிக்கை ஏற்பட்டிருக்கிறது.”

கேள்விகளுக்குப் பதிலளிக்கையில், ஸ்டீவென்சன் சொன்னதாவது:

“சோவியத் தலைவர் குருஷ்சேவின் போக்கில் இவ்வித மாறுதல் எப்படி ஏற்பட்டதென்பது எனக்குத் தெரியவில்லை. ஆனால் நான் நிச்சயமாக இதை மட்டும் கூறுவேன். அதாவது அவர் இருதய சுத்தியுடன் ஆயுத பரிகரண யோசனைகளை வெளியிட்டிருக்கின்றார்.

“இந்தச் சுற்றுப்பிரயாணத்தில் அவருக்கு ஏற்பட்ட அநுபவத்தின் விளைவாக இது இருக்கலாம்.”

ஸ்டீவென்சன் புன்முறுவலுடன் மேலும் கூறியதாவது: “சீதோஷ்ண நிலையும் உணவும் காரணமாக இருக்கலாம்.”

இதர கேள்விகளுக்குப் பதிலளிக்கையில் ஸ்டீவென்சன் கூறியதாவது: “சோவியத் பிரதமர் சமர்ப்பித்துள்ள பூரண ஆயுத பரிகரண திட்டம் படிப்படியாக நிறைவேற்றப்படக்கூடும் என்று நான் கருதுகிறேன். குருஷ்சேவ் உள் ஒன்று வைத்து புறமொன்று பேசவில்லை என்று நான் உறுதியாக நம்புகிறேன்.”

# த. நா. நகரசுத்தித் தொழிலாளர் பிரதிநிதிகள் கூட்ட தீர்மானங்கள்

தஞ்சை, செப். 20—

தமிழ்நாடு நகரசுத்தி தொழிற் சங்கங்களின் பிரதிநிதிகள் கூட்டம் இன்று காலை இங்குள்ள தென் கொண்டார் சத்திரத்தில் கூடியது. பல நகரங்களிலிருந்தும் சுமார் 50 பிரதிநிதிகள் மகாநாட்டுக்கு வந்திருந்தனர். தஞ்சை நகரசுத்தித் தொழிலாளர் சங்கத்தின் தலைவர் தோழர் எம். எஸ். கணபதி கூட்டத்திற்குத் தலைமை வகித்தார்.

தமிழ்நாடு தொழிற்சங்கக் காங்கிரஸ் செயலாளர் தோழர் கே. எம். சுந்தரம், மகாநாட்டின் முன்னுள்ள பிரச்சினைகளை விளக்கிக் கூறினார்.

ஆரம்பத்தில் வங்க உணவுப் போராட்டத்தில் உயிர் நீத்த தியாகிகளுக்கு இரண்டு நிமிட நேரம் பிரதிநிதிகள் மௌன அஞ்சலி செலுத்தினர்.

பின்னர் பிரதிநிதிகளின் விவாதத்திற்குப் பின்னர் பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

1. சிறையில் இன்னும் வாடிக் கொண்டிருக்கும் அரசியல் கைதிகளை உடனே விடுதலை செய்யப் படவேண்டும்.

2. உணவுப் பொருள் விலை உயர்வை சர்க்கார் கட்டுப்படுத்தி மலிவு விலையில் எல்லோருக்கும் உணவு தானியம் கிடைக்கச் செய்யவேண்டும்.

3 தொழிலாளி வர்க்கத்தின் கொடியாகிய செங்கொடி சந்திரனில் நாட்டப்பெற்ற சோவியத் சாதனையை வாழ்த்திப் பாராட்டியது.

4 இந்திய-சீன எல்லைத் தகராறு தீர்வுக்கு இரு நாடுகளின் சர்க்கார் பிரதிநிதிகளும் கூடிப் பேசி சமரசத் தீர்வு காண வேண்டும். எல்லைப் பிரச்சினையை மிகைப்படுத்திக் கூறும் அரசியல்வாதிகளைக் கண்டித்தது.

5 நகரசுத்தித் தொழிலாளர் பிரச்சினைகள் சம்பந்தமாக தஞ்சையில் டிசம்பர் 2-ல் மகாநாடு கூட்டுவதென்றும் தீர்மானிக்கப் பட்டது.

# அன்னிய மூலதனத்துக்கு வழி செய்யவேண்டுமாம்!

## நிலச்சீர்திருத்தம் கூடாதாம்

### முதலாளிகள் சம்மேளனத்தின் யோசனை

புதுடில்லி, செப் 22—

இந்திய-தொழில் வர்த்தக சம்மேளனம் (பெரு முதலாளிகள் ஸ்தாபனம்) அவர்களுடைய குறுகிய வர்க்க நலனைப் பிரதிபலிக்கும் கொள்கைகளைக் கொண்ட தீர்மானங்களை நிறைவேற்றியிருக்கிறார்கள். அதன் விபரமாவது:

**அனுகூல சூழ்நிலை**

"இந்தியாவின் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்துக்கு 2500 கோடி ரூபாய் தேவைப்படும். அன்னிய நாடுகளிலிருந்து கடனாகவும் உதவியாகவும் இவ்வளவு பணமும் வருமென்று நினைப்பது முடியாத காரியமாகும். ஆனாலுங்கூட, தனிப்பட்ட அன்னிய முதலாளிகள் முதலீடு செய்யும் பொருட்டு, அனுகூலமான முறையில் நாட்டின் ஸ்தாபன நிலையை உருவாக்க வேண்டியது அவசியமாகும். இது விஷயமாக இந்திய அரசாங்கம் ஒரு விஷயத்தை அதாவது, ஒரு தேசத்திலிருந்து இன்னொரு தேசத்துக்கு அன்னிய மூலதனம் பாயவேண்டுமானால், அந்த மூலதனக்காரர்களின் பிரதான நோக்கம் "லாபம்தான்" என்ற விஷயத்தை இந்திய சர்க்கார் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். அன்னிய மூலதனத்துக்கு இரட்டை வரி விதிப்பதெல்லாம் நிறுத்தப்பட வேண்டும்" என்று கூறி அன்னிய மூலதனச் சுரண்டலுக்கு வக்காலத்து வாங்குகிறது.

**3வது திட்டத்தில்**

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் உத்தேசப்படி 10 கோடி டன் உணவு தானியங்களும் 1 கோடி டன் எண்ணெய் வித்துகளும், 65 லட்சம் பேல் சணலும், 75 லட்சம் பேல் பருத்தியும் உற்பத்தி செய்யப்பட வேண்டும்.

**நிலச்சீர்திருத்தம் கூடவே கூடாதாம்**

சம்மேளனம் மேலும் கூறுவதாவது:

"அரசியல் காரணங்களினாலோ சமூக காரணங்களினாலோ நிலத்தைத் துண்டு துண்டாக ஆக்குவதின் மூலம், உற்பத்தி குறைந்துவிட்டது என்பது தான் அனுபவம். ஆகவே பெரிய பெரிய எஸ்டேட்டுகளை, நிலப் [illegible] கூடாது. ஆக்கினால் உற்பத்தி பெருகாது" என்று தனது வர்க்க நலனை சம்மேளனம் பிரதிபலித்தது.

**பிள்ளை பெருகுதே!**

மேலும், 'நாட்டில் ஜனத்தொகை பெருகிக் கொண்டேயிருப்பதால் அபாயமேற்படுமென்றும் குடும்பக் கட்டுப்பாட்டை தீவிரமாக அமுல் நடத்தி, ஜனப் பெருக்கத்தைக் குறைக்க வேண்டும்" என்று சம்மேளனம் ஆலோசனை கூறியது.

**வேலை கிடைக்குமா?**

மூன்றாவது திட்டத்தில் வேலை வாய்ப்புகள் பற்றி சம்மேளனம் பின்வருமாறு குறிப்பிடுகிறது.

"நம் நாட்டில் பொருளாதாரம் வளர்ந்து வருவதால், 10 ஆயிரம் கோடி ரூபாய் மூலதனம் போட்டு தொழில்கள் ஆரம்பித்தால் 160 லட்சம் பேருக்கு வேலைகள் கொடுக்கலாம். இவ்வளவு பேருக்கு வேலை கொடுத்தாலுங்கூட, 3-வது திட்டம் முடிந்த 4-வது திட்ட ஆரம்பத்தில் 50 லட்சம் பேர் வேலையில்லாப் பட்டாளத்தில் இருப்பார்கள்.

**மூன்றாவது திட்டத்தினால் ரூ. 375 வருட வருமானம்**

"இரண்டாவது திட்டம் முடிந்தால் தேசிய வருமானம் 12,800 கோடி ரூபாய் ஆகும். மூன்றாவது திட்டம் முடிந்தால் தேசிய வருமானம் 16,000 கோடி ரூபாய் ஆகும்.

அப்படியானால் அதன் அர்த்தம், தலைக்கு சராசரி வருட வருமானம் 310 ரூபாயிலிருந்து 375 ரூபாய் வரை இருக்கும்" என்று புள்ளி விபரத் தீர்மானம் போட்டு சர்க்காருக்கு அனுப்பியிருக்கிறது முதலாளிகள் சம்மேளனம்.

# இந்தியாவில் பட்டினி, அறியாமை நீங்கவில்லை

## வினோபாஜி வருத்தம்

பதன்கோட், செப். 22—

இந்தியாவில் கடந்த 12 ஆண்டுகளாக பார்லிமெண்டரி ஜனநாயகம் சரிவர அமலாகவில்லையென்றும் மக்களின் பட்டினி, தேவை, அறியாமை, வேலையில்லாத் திண்டாட்டம் இவை நீங்கவில்லையென்றும் ஆச்சார்ய வினோபாபாவே பிரார்த்தனைக் கூட்டத்தில் அறிவித்தார். அரசியல்வாதிகள் அதிகாரத்தைக்கைப்பற்றி நேரியதும் நேரியதல்லாததுமான வழி முறைகளைக் கையாளுகின்றனரென்றும் வினோபாஜி கூறினார்.

தற்போதுள்ள ஆட்சி முறையில் நகர மக்களுக்கே கிராமவாசிகளைவிட அதிக உரிமைகளும் அதிகாரமும் இருக்கிறதென்றும் இந்தப் பாரபட்சம் நீங்கவேண்டுமென்றும் கூறினார்.

# ஹரிஜனங்களை வெளியேற்றும் அநீதி

## கம்யூனிஸ்ட் கட்சி கண்டனம்

தூத்துக்குடி, செப். 19—

ஹரிஜனங்களின் குடியிருப்பு மனைக்காக நிச்சயிக்கப்பட்டு கல் போட்டு கொடுக்கப்பட்டுள்ள நிலங்களிலிருந்து 25 வருஷங்களாகக் குடியிருந்து வரிகள் செலுத்திவரும் 15 ஹரிஜனக் குடும்பங்களை வெளியேற்றி அந் நிலங்களை பக்கத்திலிருக்கும் "எஸ்.பி.ஜி." மிஷின் கோவிலுக்குக் கொடுக்கத் திட்டமிட்டிருப்பதையும் ஹரிஜன மக்களைக் காலிசெய்ய எடுத்துவரும் நடவடிக்கையையும் கம்யூனிஸ்ட் கட்சிப் பொதுக் கூட்டம் கண்டித்தது. தோழர் எஸ். ஏ. முருகானந்தம் தலைமை வகித்தார்.

**சாரி செய் நடவடிக்கை எடு!**

இவ்விதம் வெளியேற்ற நடவடிக்கை எடுத்த டிப்டி தாசில்தார் மீது நடவடிக்கை எடுக்க வேண்டுமென்றும் மேற்படி மனைகளை குடியிருப்பவர்களுக்கே சாரி செய்து கொடுக்க வேண்டுமென்றும் சர்க்காரை இக்கூட்டம் கேட்டுக் கொண்டது

தூத்துக்குடியில் மிகப் பெரிய தனவந்தர்கள் பல வீடுகள், பல காம்பவுண்டுகள் உள்ளவர்கள் அரசாங்கத்தின் புறம்போக்கு நிலங்களை ஆக்கிரமித்திருப்பதை [illegible] உடனடியாக அப்புறப்படுத்தி ஏழை மக்களுக்கு குடியிருப்பு மனைக்குக் கொடுக்க வேண்டுமெனவும் இக்கூட்டம் சர்க்காரைக் கேட்டுக் கொண்டது.

இத்தீர்மானங்களை நகரசபை உறுப்பினர் தோழர் டி. கே. சுவாமிதாஸ் கொண்டு வந்தார்.

# சீன தேசீய தினம்

## கே. எம். பணிக்கருக்கு அழைப்பு

புதுடில்லி, செப். 23—

சீனாவில் இந்திய தூதராக இருந்த திரு கே. எம். பணிக்கருக்கு பீகிங்கில் நடக்கப்போகிற சீன தேசீய தினக் கொண்டாட்டத்தில் கலந்துகொள்ளச் சீன சர்க்கார் அழைப்பு அனுப்பியது. உடல் நலமில்லாததால் பணிக்கர் அந்த அழைப்பை ஏற்றுக் கொள்ளவில்லை. தாம் பின்னர் சீனாவுக்குச் செல்லக்கூடுமென்றும் ஆனால் திட்டம் எதுவுமில்லையென்றும் கே. எம். பணிக்கர் அறிவித்தார்.

—பி. டி. ஐ

# வெள்ளப்பெருக்கினால் குஜராத்தில் பெரும் சேதம்

அகமதாபாத், செப் 23—

குஜராத்தில் எட்டு ஜில்லாக்களில் சமீபத்தில் ஏற்பட்ட வெள்ளப் பெருக்கின் காரணமாக 28 பேர்கள் இறந்தனர் என்றும் 8,500 வீடுகள் சேதமடைந்தனவென்றும் அதிகார பூர்வமான செய்தி கூறுகிறது. செய்தி போக்குவரத்துக்கள் சரியாக மேற்கொள்ள முடியவில்லையென்றும், பயிர்களுக்கும் பொது சொத்துக்களுக்கும் ஏற்பட்ட சேதத்தின் விபரம் தெரிய கொஞ்ச காலம் ஆகுமென்றும் அச் செய்தி மேலும் கூறுகிறது.

# ஆசிரியர்களுக்கு வேலை உத்தரவாதம்

# கல்லூரி ஆசிரியர்களுக்கு சம்பள உயர்வு

## சென்னைப் பல்கலைக்கழக அகடெமிக் கவுன்சில் கூட்டத்திற்கு பேராசிரியர் சங்கர நாராயணனின் தீர்மானங்கள்

மதுரை, செப் 22—

சென்னைப் பல்கலைக் கழக அகாடமிக் கவுன்சிலின் 30-9-59 தேதிய கூட்டத்திற்கு, மதுரை [illegible] காலேஜ் முதல்வரும், சென்னைப் பல்கலைக் கழக செனட், அகாடமிக் கவுன்சில் உறுப்பினருமான பேராசிரியர் ஆ. சங்கர நாராயணன் எம். ஏ. கொண்டுவரும் தீர்மானங்கள் வருமாறு:

(1) கோவை அரசாங்கக் கலைக் கல்லூரியில் 1960-61ம் கல்வி வருடத்தில் புகுத்தப்படும் பி. ஏ. வகுப்புக்கான தமிழ் போதனாமொழி முன்னணித் திட்டத்தில் சேரும் மாணவர்களுக்கு பரீட்சையிலும், போதனையிலும் தமிழ்மொழி என்ற அம்சத்தில் ஒரே தொடர்ச்சி இல்லாததை அகாடமிக் கவுன்சில் ஆழ்ந்து கவனிக்கிறது. அத்திட்டத்தின் கீழ் பி. ஏ. வகுப்பில் சேர விரும்பும் மாணவர்கள் உயர்நிலைப் பள்ளியில் தமிழிலும், புகுமுக வகுப்பில் ஒரு வருடத்துக்கு ஆங்கிலத்திலும் பாடங்களைப் பயின்று மறுபடியும் மூன்று வருடப் பட்டப் படிப்பில் தமிழில் கல்வி பயிலவேண்டியுள்ளது.

ஆகவே அடுத்த ஆண்டில் முன்னணித் திட்டத்தில் அனுமதிக்கப்படப்போகும் ஒரு மாணவனது கல்வியில் ஏற்படும் இந்த இடைவெளியை அரசாங்கத்தின் கவனத்துக்குக் கொண்டுவரவேண்டுமென்றும், முன்னணித் திட்டத்தை புகுமுகவகுப்புக்கும் விஸ்தரித்து இந்த முரண்பாடு எதிர்காலத்தில் நீடிக்காமலிருக்க வழி செய்ய வேண்டுமென அரசாங்கத்துக்கு ஆலோசனை கூறவேண்டுமென்றும் பல்கலைக் கழக சிண்டிகேட் சபைக்கு அகாடமிக் கவுன்சில் சிபாரிசு செய்கிறது.

**தமிழ்ப் பேராசிரியர்**

(2) சென்னைப் பல்கலைக் கழகத்திலுள்ள ஒவ்வொரு கலை விஞ்ஞானக் கல்லூரியிலும் பட்டப் படிப்புக்கு 12-வது பிரிவின் கீழ் தமிழ் போதிக்கப்பட்டாலும் இல்லாவிட்டாலும், அந்தத் துறையில் உள்ள ஆசிரியர்களின் எண்ணிக்கையைக் கருதாமலும், கல்லூரி நிர்வாகம் உடனடியாக ஒரு தமிழ்ப் பேராசிரியரை நியமிக்குமாறு கோர சிண்டிகேட் சபைக்கு அகாடமிக் கவுன்சில் சிபாரிசு செய்கிறது.

**ஆசிரியர்களுக்கு வேலை உத்தரவாதம்**

(3) சென்னைப் பல்கலைக் கழகத்தில் இணைக்கப்பட்ட தனி நபர்களால் நடத்தப்படும் கல்லூரிகளில் பணி புரியும் ஆசிரியர்களுக்கு வேலை உத்தரவாதம் இல்லையென்பதையறிய அகாடமிக் கவுன்சில் ஆழ்ந்து கவலைப் படுகிறது. தனி நபர்களால் நடத்தப்படும் கல்லூரிகளிலிருந்து விலக்கப்படும் ஆசிரியர்கள் அதை எதிர்த்து சிண்டிகேட் சபைக்கு அப்பீல் செய்தால், சிண்டிகேட் சபை தலையிட்டுத் தீர்ப்புக் கூறும் வரை அவர்கள் அந்தக் கல்லூரியில் பணிபுரிய அனுமதிக்கப்படவேண்டும் என்றும் அதற்கேற்ப நிர்வாகங்கள் செய்யும் வேலை ஒப்பந்தங்களில் இந்த நிபந்தனையும் சேர்க்கப்பட வேண்டும் என்றும், நிர்வாகங்களுக்கு அறிவிக்க வேண்டும் என சிண்டிகேட் சபைக்குச் சிபாரிசு செய்ய இக்கூட்டம் தீர்மானிக்கிறது.

**சம்பள உயர்வு**

(4) சென்னைப் பல்கலைக் கழகத்திலுள்ள பல கல்லூரிகளில் வேலை செய்யும் ஆசிரியர்களுக்கு பல்கலைக் கழக மான்யக் குழுத் திட்டப்படி, வேலை நேரங்களும், வேலைப் பளுவும் அதிகரிக்கப்பட்டுள்ளன. அதே திட்டப்படி சம்பள உயர்வு மட்டும் அளிக்கப்படவில்லை என்பதையறிந்து அகாடமிக் கவுன்சில் வருத்தமடைகிறது. சாதாரண தார்மீக நியாயத்தின் அடிப்படையிலாவது ஆசிரியர்களுக்கு அவர்களுடைய வேலை அதிகரிப்புக்குத் தகுந்தவாறு ஊதியத்தையும் அதிகரிக்க சிண்டிகேட் சபை பிரிசு செய்ய வேண்டுவதுடன், பல்கலைக் கழக மான்யக் குழுவின் சிபாரிசுகளை அமுல் நடத்தாத கல்லூரி நிர்வாகங்களை 1958-59ம் கல்வி வருடத்திலிருந்து சம்பள உயர்வு கொடுத்து அதை அமுல் நடத்தச் செய்யுமாறு வலியுறுத்த வேண்டும் எனச் சிண்டிகேட் சபைக்குச் சிபாரிசு செய்கிறது.

(5) ஆராய்ச்சிப் பட்டங்களுக்குப் பதிவு செய்துகொள்ளும் மாணவர்களைப் பொறுத்தவரை அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பட்டங்களை (பட்டப் படிப்புக்கு மேல்பட்டம், ஆராய்ச்சிப் பட்டம்), அவற்றை யொத்த சென்னைப் பல்கலைக் கழகப் பட்டங்களுக்குச் சமமாக மதிக்க வேண்டுமெனச் சிண்டிகேட் சபைக்குச் சிபாரிசு செய்ய இக்கூட்டம் தீர்மானிக்கிறது.

**ஆராய்ச்சிக்குப் பதிவு செய்துகொள்ளும் வரையறைகள்**

(6) பல்கலைக் கழகத்தின் கீழுள்ள ஏதாவதொரு குறிப்பிட்ட ஸ்தலத்தில் (யூனிவர்சிடி சென்டர்) பணியாற்றும் எந்த ஆசிரியரும் கலைத்துறையில் எந்தப் பாடத்திலும் ஆராய்ச்சிக்குப் பதிவுசெய்துகொள்வதற்கான வரையறைகள் கீழ்க்கண்டவாறு இருக்க வேண்டும் என்று சிண்டிகேட்டுக்குச் சிபாரிசு செய்ய இக்கூட்டம் தீர்மானிக்கிறது. ஆராய்ச்சிக்குப் பதிவு செய்வோர் ஆரம்ப கல்வித் தகுதிகளைத் திருப்தி செய்பவராகவும், அந்தப் பாடத்தில் அவர்களுக்கு வழிகாட்டியாக ஒரு பல்கலைக் கழகப் பேராசிரியர் அமைந்தும் இருந்தால் போதுமானது. அவர் பணியாற்றும் கல்லூரி அந்தப் பாடத்தில் பட்டப்பின் படிப்புக்கு வசதியுள்ளதாக இருக்க வேண்டியதில்லை.

இவை தவிர இன்னும் பல தீர்மானங்களையும் பேராசிரியர் சங்கர நாராயணன் கொண்டு வருகிறார்.

# மைசூர் மாநிலத்தில் மக்கள் பட்டினியால் வாடுகிறார்கள்

## மைசூர் சபாநாயகர் கூறுகிறார்!

பீஜப்பூர், செப். 23—

"பீஜப்பூர் மாவட்டத்தில் ஹுங்குண்டு தாலுகாவில் வாழும் மக்கள் பட்டினியால் வாடுகிறார்கள். அவர்களிடம் உணவு தானியம் வாங்குவதற்குப் பணம் இல்லை. பருவகால மழை தவறியதால் கடுமையான வறட்சி ஏற்பட்டிருக்கிறது" என்று மைசூர் சட்டமன்ற சபாநாயகர் எஸ். ஆர். காந்தி நேற்றுப் பத்திரிகை நிருபர்களிடம் பேசுகையில் கூறினார்.

அவர் மேலும் கூறுகையில், "ஹுங்குண்டு தாலுகாவின் நிலைமை மிகவும் மோசமாக இருக்கிறது. நிலைமை சிறிதும் அபிவிருத்தி அடையவில்லை. மக்கள் தாங்கள் பட்டினியால் பரிதவிப்பதாகக் கூறுகிறார்கள். உணவு தானியமும் அவர்களுக்கு எளிதாகக் கிடைக்கவில்லை. அறுவடை சரியில்லாததால் அவர்களிடம் போதுமான பணமும் இல்லை. எனவே அரசாங்கம் உடனடியாக அப்பகுதிகளில் நிவாரண வேலைகள் தொடங்க வேண்டும். உணவு தானியக் கடைகள் திறக்க வேண்டும். வறட்சியால் பாதிக்கப்பட்ட பகுதியிலுள்ள விவசாயிகளுக்கு தக்காவிக் கடனுதவியும் அளிக்க வேண்டும்" என்று கூறினார்.

பாதிக்கப்பட்ட பிரதேசங்களில் சபாநாயகர் சுற்றுப் பிரயாணம் செய்துவிட்டு வந்த பின்னரே மேற்கண்டவாறு கூறினார்.

# பலாத்காரம் குறைகிறதாம்

## கேரள கவர்னர் கருத்து

திருவனந்தபுரம், செப். 22—

கேரளத்தில் பலாத்கார செயல்கள் குறைந்து வருகிறது என்று தமது சொந்த கருத்தை கவர்னர் டாக்டர் ராமகிருஷ்ண ராவ் இன்று வெளியிட்டார்.

பத்திரிகை நிருபர்களிடம் பேசுகையில் போலீஸார் தமது முழு பலத்தையும் உபயோகித்து பலாத்காரத்தை ஒடுக்குவார்கள் என்று கவர்னர் தெரிவித்தார்.

"போலீஸார் நடவடிக்கை எடுக்கவில்லை" என்று கம்யூனிஸ்ட் தலைவர்கள் சுட்டிக் காட்டியிருப்பதை ஒரு நிருபர் கவர்னரின் கவனத்திற்குக் கொண்டு வந்தார்.

"இம்மாதிரி புகார்களுக்கு ஆதாரம் எதுவும் இல்லை" என்று அவர் மழுப்பலாக பதில் கூறினார்.

தமது ஆலோசகர் அடுத்த வாரம் பதவியேற்பார் என்று டாக்டர் ராமகிருஷ்ணராவ் கூறினார்.

# பிச்சைக்காரனிடம் ரூ. 12,467

புவனேஸ்வர், செப். 22—

பரிபாதா என்ற டவுனில் வாழும் பிச்சைக்காரன் ஒருவன் சமீபத்தில் இறந்தபோது அவனிடம் 5500 ரூபாய் நோட்டுகள் உள்பட ரூ. 12467 ரூபாய் இருந்தது.

இன்று இத்தகவலை முதல் அமைச்சர் டாக்டர் மெஹ்தாப் ஒரிஸ்ஸா சட்டசபையில் வெளியிட்டார். அந்தப் பிச்சைக்காரனுக்கு யாரும் வாரிசு இல்லாததால், அந்தப் பணம் சர்க்கார் கஜானாவில் சேர்க்கப்பட்டதென்றார்.

# பஞ்சாயத்து வாசகசாலையில் ஜனசக்தி, தாமரை

விளாத்திகுளம், செப். 23—

விளாத்திகுளம் பஞ்சாயத்தின் சாதாரணக்கூட்டம் பஞ்சாயத்து தலைவர் கே சுப்ரமணிய முதலியார் தலைமையில் 21-9-59ல் கூடியபோது பஞ்சாயத்து நூல் நிலையத்திற்கு ஜனசக்தி, தாமரை, நம்நாடு ஆகிய பத்திரிகைகள் வரவழைக்கப்படுவதென்று தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. அது முதல் மேற்படி பத்திரிகைகள் வாசகசாலைக்கு வந்துகொண்டிருக்கின்றன. (நி-ர்)

# ராமநாதபுரம் மாவட்டச்செய்திகள்

**பாம்பன்**

இராமேஸ்வரத்தை அடுத்த பாம்பன் பஞ்சாயத்துத் தலைவர் தேர்தல் அண்மையில் நடைபெற்றபொழுது, காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த திரு. முகைதீன் சீனி ஆவல், தி. மு. கவைச் சேர்ந்த திரு முகமது இபுராஹீம் ஆகிய இருவருக்கும் சமமான வாக்குகள் கிடைத்தன. ஆகவே தேர்தல் அதிகாரி சீட்டுக் குலுக்கிப் போட்டதில் திரு முகமது இபுராஹீம் வெற்றியடைந்தார்.

இவ்வூரில் முதன் முதலாக அமைக்கப்பட்ட இந்த பஞ்சாயத்துக்குக் காங்கிரசல்லாத ஒருவர் தலைவராக வந்துள்ளார்.

காசிம் முகம்மது தலைமையில் நடைபெற்ற பாராட்டுக்கூட்டத்தில் கோடூர் ராஜகோபால் சாஸ்திரி, நம்பி நாராயணன், முகம்மது ஆவல் ஆகியோர் பேசினர்.

**இராஜபாளையம்**

கம்யூனிஸ்ட் கட்சியின் துரைச்சாமிபுரம் கிளைக்கூட்டம் தோழர் கே. ராஜகோபால் தலைமையில் நடைபெற்றபொழுது வங்க சர்க்காரின் அடக்குமுறையைக் கண்டித்தும் துப்பாக்கிப் பிரயோகங்களுக்கு பகிரங்க விசாரணை கோரியும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டு ஜனாதிபதிக்கு அனுப்பப்பட்டது.

18-9-59ல் அம்பலப்புளி பஜாரில் தோழர் டி. எம். ராமசாமி தலைமையில் நடைபெற்ற கம்யூனிஸ்ட் கட்சிப் பொதுக்கூட்டத்தில் தோழர் எம். ஆதிமூலம் வங்க உணவுப் போராட்டத்தை ஆதரித்தும், சர்க்காரின் அடக்குமுறையை பலமாகக் கண்டித்தும் பேசினார்.

'சீனாவின் 'ஆக்கிரமிப்பு' என்ற அபாண்டம் சமத்தப்படுவது ஏகாதிபத்திய வாதிகளின் சூழ்ச்சி என்றும் கூறினார்.

80,000 ஜனத்தொகையுள்ள இராஜபாளையத்திற்கு 4 நியாய விலைக் கடைகள் போதாது; 12 கடைகள் வேண்டுமென்றும் படி அரிசி 12 அணாவிற்கு விற்கக் கோரியும், ஐஸன்ஹோவர், குருஷ்சேவ் சந்திப்பை வரவேற்றும் மற்றும் பல தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டன.

**சிவகெங்கை**

நில அளவை அலுவலக தமிழ் இலக்கிய மன்றத்தின் சார்பில் 18-9-59ல் ராஜராஜேஸ்வரி கலா நிலையத்தில் திரு. மீ. ராஜேந்திரன் தலைமையில் மகா கவி பாரதி விழா நடைபெற்றது. 'பாரதியின் இலக்கிய விருந்து' என்ற தலைப்பில் நடைபெற்ற பேச்சுப் போட்டியில் இரா. பாண்டியன், அ. கமால், சரவணன், நேத்திரராமன், மா. கருப்பையா ஆகியோர் பங்கு கொண்டனர் திரு. சொ. சண்முகம் 'பாரதியின் கவிதை நயம்' எனும் பொருள் பற்றி சிறப்புச் சொற்பொழிவு நிகழ்த்தினார் திரு தேவ. சீனி சுந்தரம் 'குயில்' என்னும் பாரதியின் சிற்றிலக்கியம் பற்றி விரிவுரை ஆற்றினார்

பேச்சுப் போட்டியில் அ. கமால் முதற் பரிசும், இரா. பாண்டி 2-ம் பரிசும் பெற்றனர்.

**சத்திரப்பட்டி**

புதுத்தெரு வாலிபர் சங்கப் பேரவைக் கூட்டம் 5-9-59ல் திரு. வீ குருசாமி தலைமையில் நடைபெற்றபொழுது 22-9-59ல் ஸ்ரீவில்லிபுத்தூரில் நடைபெறும் கைத்தறி நெசவாளர் ஆர்ப்பாட்டத்தில் சங்க உறுப்பினர்கள் கலந்துகொள்ளவேண்டுமென்றும், கேரளத்தில் ஜனாதிபதி ஆட்சியைக் கண்டித்தும், வங்க உணவுப் போராட்டத்திற்கு ஆதரவு தெரிவித்தும், நூல் விலை ஏறிக்கொண்டே போவதைத் தடுக்கக் கோரியும் பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

# புதுவைச்செய்திகள்

**பாராட்டுக் கூட்டம்**

முதலியார்பேட்டைக் கொம்யூனைச் சார்ந்த உழந்தை கிராம பஞ்சாயத்தில் மக்கள் முன்னணி கமிட்டியின் சார்பிலே வெற்றி பெற்ற முன்னணி தோழர்களுக்குப் பாராட்டுக் கூட்டம் நடைபெற்றது. கூட்டத்தில் தோழர்கள் வ. சுப்பையா, கோவிந்தராசு நாயகர், ஆர். வைத்தியலிங்கம், வெ நாராயணசாமி, ஆர் எம். இளமான்சோ, சரஸ்வதி சுப்பையா ஆகியோர் கலந்து கொண்டனர் கூட்டத்திற்கு திரு ஜி. ரங்கநாதன் (நகரசபை உறுப்பினர்) தலைமை வகித்தார்.

**உணவுப் போராட்டம்**

இன்று புதுவையில் நிலவி வரும் உணவுப் பிரச்சினைக்குத் தீர்வுகாண 19-9-59ல் கூடிய உணவு பரிசீலனை மகாநாட்டில் தேர்ந்தெடுக்கப்பட்ட செயல் கமிட்டி எடுத்துள்ள முடிவுகளைப் பற்றியும், அதன் தலைமையில் நடைபெறப்போகும் போராட்டத்தில் எல்லாப் பகுதி மக்களும் கலந்துகொள்ள வேண்டுமென்றும், இப்போராட்டத்திற்கு முன் நடவடிக்கையாக உணவு நெருக்கடியைத் தீர்க்கவும், விலை உயர்வைக் கட்டுப்படுத்தவும் ரூபாய்க்கு 3 படி அரிசி கிடைக்கவும் கோரி இந்தியப் பிரதமருக்கு புதுவைப் பிரதேசப் பூராவிலுமுள்ள எல்லா மக்களும் தந்திகள் அடித்தும், தபால் கார்டுகள் எழுதியும் வற்புறுத்த வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டனர். மேலும் இப் பிரச்சினையைத் தீர்க்க சமீபத்தில் நிறுவப்பட்ட காங்கிரஸ் ஆட்சி தவறிவிட்டதென்றும், இன்று அதன் கட்சிக்குள்ளேயிருக்கும் பதவி போட்டிகளையும், பல்பெர்மிட் போட்டிகளையும் தீர்த்துவைக்கத்தான் செயல்படுகிறதேயொழிய, மக்களின் பிரச்சினைகளைத் தீர்க்க முன்வரவில்லையென்றும் எடுத்துக் காட்டப்பட்டது.

**தீர்மானங்கள்**

இறுதியில், முதலியார் பேட்டைக் கொம்யூனில் அண்மையில் காலமான கட்சித் தோழர்களான நியாயகசாமி, [illegible] ரங்கநாதன் ஆகியோரின் மறைவுக்கு அனுதாபம் தெரிவித்தும், முதலியார்பேட்டைக்கொம்யூனில் உள்ள ஓயின்டேரியை மண்ணெடுத்து மராமத்து செய்ய வேண்டுமென்றும், அரசாங்கம் உணவு நெருக்கடியைத் தீர்க்க, விலை உயர்வைக் கட்டுப்படுத்தி, ரூபாய்க்கு 3 படி அரிசி விதம் விநியோகிக்க வேண்டும் என்றும் கோரிய மூன்று தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டன.

# புதுவை சர்க்காரின் உணவுக் கொள்கைக்கு உணவுப் பரிசீலனை மாநாட்டில் கண்டனம்

## போராட்டம் நடத்த முடிவு

### செயல் கமிட்டி அமைப்பு

புதுவை, செப். 20—

கம்யூனிஸ்ட் கட்சி, மக்கள் முன்னணி, விவசாய சங்கம், தொழிற்சங்கக் கவுன்சில், மாதர் சங்கம் ஆகிய ஸ்தாபனங்கள் கூட்டு வேண்டுகோளுக்கு இணங்கிய உணவுப் பரிசீலனை மாநாடு இன்று புதுவைஅம்பலத்தாடு மடத்து வீதி கல்யாண மண்டபத்தில் கூடியது. தமிழரசுக் கழகம் உள்ளிட்ட பல்வேறு ஸ்தாபனங்களின் பிரதிநிதிகளும், பொது மக்களும் மாநாட்டில் கலந்துகொண்டனர். இம்மாநாட்டிற்கு நெட்டப்பாக்கம் கொம்யூன் நகர சபை உறுப்பினர் திரு. சந்திரசேகர ரெட்டியார் தலைமை வகித்தார். மாநாட்டு விவாதங்களிலும், ஆலோசனை தருவதிலும் பல்வேறு ஸ்தாபனங்களின் தலைவர்கள் பங்கு கொண்டனர்.

**ஜனாப் உசேன்**

சட்டமன்ற உறுப்பினர் மு மு உசேன் பேசுகையில், கடந்த ஓராண்டுக்கு மேலாக புதுவை ராஜ்ய உணவு நெருக்கடியைக் குறித்து சர்க்காருக்கு பலவித முறையில் எடுத்துக் காட்டியிருந்தும், இதுவரை எவ்வித நடவடிக்கையும் எடுக்காதிருப்பது மிக வருந்தத்தக்கது என்றார்.

**கோவிந்தராசு நாயகர்**

விவசாய சங்கத் தலைவரும், சட்ட மன்ற உறுப்பினருமான திரு. கோவிந்தராசு நாயகர் பேசுகையில். வெள்ளையன் ஆட்சியிலே வங்கத்திலே பஞ்சத்தால் மக்கள் செத்து மடிந்தபோது, காங்கிரஸ் கட்சியினர் இந்தியா பூராவிலும் பெருங்குரல் எழுப்பினர். ஆனால், அதே வங்கத்தில் இன்று காங்கிரஸ் ஆட்சியால் ஏற்பட்டுள்ள உணவு நெருக்கடியைக் குறித்து எவரும் வாய் திறப்பதில்லை. உணவு கேட்கும் மக்களை வங்கத்தில் ஆட்சி புரியும் காங்கிரஸ் மந்திரி சபை சுட்டுக்கொல்லுகிறது. அத்தகைய காங்கிரசின் ஒரு அங்கம் தான் புதுவையின் ஆட்சியாளர்கள். எனவே, புதுவையின் உணவு நெருக்கடியை அவ்வளவு எளிதாக தீர்த்து வைக்கமாட்டார்கள். எனவே, கட்சிபாகுபாடின்றி எல்லா மக்களும் உணவுப் போராட்டத்தில் ஈடுபட வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்.

**முனி. சுப்ரமண்யம்**

தமிழரசு கழகத் தலைவர் திரு முனி. சுப்ரமண்யம் பேசுகையில், சட்டமன்றத்தின் எதிர்க்கட்சி கொண்டுவந்த உணவு நெருக்கடி பற்றிய தீர்மானத்தைப் புறக்கணித்துள்ளார்கள், இதிலிருந்தே புதுவை சர்க்கார் ஜனநாயக விரோத சர்க்கார் என்பது தெரிகிறது. எனவே போராட்டத்தின் மூலம்தான் இப்பிரச்சினைக்கு வழி காண முடியும். அத்தகைய போராட்டத்தில் தமிழரசுக் கழகம் தனது முழு ஆதரவையும் தரமுன்வரும் என்று உறுதி கூறினர்.

**தையநாயகி அம்மாள்**

மாதர் சங்கத் தலைவி திருமதி தையநாயகி அம்மாள் பேசுகையில், நாளுக்கு நாள் உணவுப் பொருட்களின் விலை உயர்ந்து வருவது மாதர்களாகிய எங்களுக்குத்தான் தெரியும். ஏனென்றால் கடைத்தெருவில் அன்றாடத் தேவைப் பொருட்களை வாங்கும் பொறுப்பு எங்களைச் சார்ந்ததாகவுள்ளது. கடந்த ஓராண்டாக உணவு நெருக்கடியைத் தீர்க்க இந்த அரசாங்கம் எவ்வித திட்டமும் திட்டவில்லை. வேண்டுமானால் எங்களால் முடியவில்லையென்று அரசாங்கம் கூறிவிட்டடும். நாங்கள் திட்டத்தை தீட்டித் தருகிறோம் என்றார்.

**என். குருசாமி**

விவசாய சங்க செயலாளரும், சட்ட மன்ற உறுப்பினருமான தோழர் என். குருசாமி பேசுகையில், புதுவையில் நிலவி வரும் உணவு நெருக்கடி குறித்து பல தூது கோஷ்டிகள் மகஜர், பொதுக்கூட்டங்கள் நடத்தினோம். அசெம்பிளியிலும் இப் பிரச்சினையைக் கொண்டுவந்தோம். ஆனால் அரசாங்கம் ஏற்கவில்லை. இந்த அரசாங்கத்தை அசைய்வைக்க போராட்டம் ஒன்றுதான் வழி என்றார்.

**ஆழ்வார்**

தொழிற்சங்கத் துணைச் செயலாளர் தோழர் ஆர். ஆழ்வார் பேசுகையில், இன்று புதுவையில் நிலவிவரும் நெருக்கடியை மட்டுமல்ல, தொழிலாளர்கட்கு ஒரு தானிய டிப்போ திறக்க வேண்டுமென்று அவார்டு தீர்ப்பில் இருந்தும், இன்று வரை ஏற்படுத்தவில்லை. இந்த சர்க்கார் மக்கள் நலனில் அக்கறையில்லாத சர்க்கார். உணவுப் பிரச்சினைப் போராட்டத்தில் தொழிலாளர்களைப் பெரும்பான்மையாகக் கலந்துகொள்வார்கள் என்றார்.

**தோழர் வ. சுப்பையா**

சட்ட மன்ற எதிர்க்கட்சித் தலைவர் தோழர் வ சுப்பையா பேசுகையில், இன்று நாட்டில் தினம் தினம் விலை உயர்ந்து கொண்டே போகிறது. அந்த அளவுக்கு மனிதனுடைய வருமானமோ உயராமல் அன்றிருந்த மேனிக்கு அழிவில்லாமல் உள்ளது. இன்று நாட்டில் உணவுப் பஞ்சமானது உணவை உற்பத்தி செய்யும் விவசாயியே கடையில் உணவு வாங்கும் நிலையில் உள்ளது. இந்த ராஜ்யத்தில் நிலவிவரும் உணவு நெருக்கடியைப் போக்க வேண்டுமென பன்முறை வற்புறுத்தியும், அரசாங்கம் அசையவில்லை. இப் பிரச்சினை தானாக மாறிவிடாது. மக்கள்தான் மாற்ற முடியும். மத்திய அரசாங்கம் இந்த ராஜ்யத்தில் விசேஷ நிலைமை வந்தால் தான் உதவுமென்று கூறுகிறது. அப்படியென்றால், மத்திய சர்க்கார் கருதும் விசேஷ நிலைமை என்ன? புதுவையில் பெரும் வெள்ளம் வந்து விளை நிலங்கள் பாழ ஆகியிருக்க வேண்டும். அல்லது காலமழை தவறியிருக்க வேண்டும், அதுவுமில்லையென்றால் குறைந்தது பெரும் பஞ்சம் ஒன்று ஏற்பட்டு, அதில மக்கள் பெருமளவுக்கு மடிந்திருந்தால், அந்த மாதிரியான விசேஷ நிலைமை ஏற்பட்டால் தான் மத்திய அரசாங்கம் மிகவும் கருணை புரிந்து, இன்றுள்ள பற்றாக்குறை 15 ஆயிரம் டன்னுக்கு 5 ஆயிரம் டன் உதவி புரியுமாம். இப்போது உணவு விலை எவ்வளவு உயர்ந்து விட்டாலும், மக்கள் அதிக விலை கொடுத்தாவது உணவுப் பொருட்களை வாங்கி விடுவார்களாம். எனவே, அரசாங்கம் தானாக இப்பிரச்சினைக்கு முடிவுகாண செயல்படாது, நாம்தான் அதை செயல்படுத்தச்செய்ய வேண்டும் என்று கூறினார்.

பின்னர் மாநாட்டில், சட்ட மன்ற உறுப்பினர் திரு. கோவிந்தராஜு நாயகரை கன்வினராகக் கொண்ட திரு. மு. மு. உசேன் (மக்கள் முன்னணி துணைத் தலைவர்) திரு. முனி. சுப்ரமணியம் (தமிழரசுக்கழகம்) திரு. பழனிசாமி செட்டியார் (புதுவை துணை மேயர்) திரு. எஸ். ராமலிங்கம் (பாகூர் நகர சபை உறுப்பினர்) திரு. சந்திர சேகர ரெட்டியார் (நெட்டப்பாக்கம் நகரசபை உறுப்பினர்) திரு. சுப்புராயப்படையாட்சி அரியாங்குப்பம் நகரசபை உறுப்பினர்)

திரு. மணி அய்யர் (செய்தி நிருபர்) திருமதி தையநாயகியம்மாள் (மாதர் சங்கத் தலைவி) சட்டமன்ற உறுப்பினர்கள் திருவாளர்கள் வ சுப்பையா, பக்கீர் முகமது, இளமான்சோ, எஸ். நடராஜன், வெ. நாராயணசாமி (உழவர்கரை மேயர்), ஆர். வைத்தியலிங்கம் (முதலியார் பேட்டை மேயர்) ஆகியவர்களை உள்ளிட்ட செயல் கமிட்டி ஒன்று நிருவப்பட்டது.

அச்செயல் கமிட்டி 25-9-59 முதல் 10-10-59வரை புதுவைப் பிரதேசம் பூராவிலும் உணவு வாரமாகக் கொண்டாடுவதென்றும், ஊர்வலங்கள், பொதுக் கூட்டங்கள் நடத்தி உணவுப் பிரச்சினையைத் தீர்க்கக் கோருவது, தூது கோஷ்டியாகச் சென்று கமிஷனரைச் சந்திப்பது, இறுதியாக தேதி நிர்ணயம் செய்து போராட்டத்தில் இறங்குவது என்று முடிவு செய்யப் பட்டது.

